# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரிபூசைகள், தர்மதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

### சனி, ஞாயிறு, திங்கள், செவ்வாய் கிழமைகளில்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | முதல் | 3-30 | வரை | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 4-15 | ,, | தோமால சேவை (ஏகாந்தம்) |
| 4-15 | ,, | 4-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 4-30 | ,, | 5-00 | ,, | முதல் அர்ச்சனை (ஏகாந்தம்) |
| 5-00 | ,, | 5-30 | ,, | முதல் மணி, சாத்துமுறை |
| 5-30 | ,, | 1-00 | மதியம் | ஸர்வ தரிசனம் |
| 1-00 | ,, | 1-30 | ,, | 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி |

மாலை

| | | | | |
|---|---|---|---|---|
| 1-30 | ,, | 7-30 | ,, | ஸர்வ தரிசனம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | இரவு கைங்கர்யம், |
| 8-30 | ,, | 11-30 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-30 | | | | ஏகாந்த சேவை (ஏகாந்தம்) |

### புதன் கிழமைகளில் (சஹஸ்ர கலசாபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 6-00 | ,, | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 6-00 | ,, | 6-15 | ,, | சுத்தி முதலியவை |
| 6-15 | ,, | 7-00 | ,, | தோமால சேவை (ஏகாந்தம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை (ஏகாந்தம்) |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 10-00 | ,, | சஹஸ்ர கலசாபிஷேகத்திற்கு ஏற்பாடுகள் |
| 10-00 | ,, | 1-00 | மதியம் | சஹஸ்ர கலசாபிஷேகம் |
| 1-00 | ,, | 2-00 | ,, | சுத்தி இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி |

மாலை

| | | | | |
|---|---|---|---|---|
| 2-00 | ,, | 8-00 | இரவு | ஸர்வ தரிசனம் |
| 8-00 | ,, | 9-00 | ,, | சுத்தி இரவு கைங்கர்யம், இரவு மணி முதலியவைகள் |
| 9-00 | ,, | 11-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-00 | ,, | 11-30 | ,, | சுத்தி முதலியவைகள் |
| | | 11-30 | | ஏகாந்த சேவை (ஏகாந்தம்) |

### வியாழக்கிழமைகளில் (திருப்பாவாடா உத்ஸவம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 6-00 | ,, | விஸ்வரூப தரிசனம் |
| 6-00 | ,, | 6-15 | ,, | சுத்தி முதலியவை |
| 6-15 | ,, | 7-00 | ,, | தோமால சேவை (ஏகாந்தம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 11-00 | ,, | சாலிம்பு, சுத்தி 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடா அலங்காரம், மணி, திருப்பாவாடா கிரஹஸ்தர்களுக்கு பஹுமானம் முதலியவை |
| 11-00 | ,, | 7-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 7-00 | ,, | 7-30 | இரவு | சுத்தி முதலியவை |
| 7-30 | ,, | 9-00 | ,, | பூலங்கி சமர்ப்பணம் இரவு கைங்கர்யம், இரவு மணி |
| 9 00 | ,, | 11-30 | ,, | பூலங்கி (ஆர்ஜிதம்) |
| 11-30 | ,, | 11-45 | ,, | சுத்தி முதலியவை |
| | | 11-45 | | ஏகாந்தசேவை (ஏகாந்தம்) |

### வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 5-00 | ,, | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 5-00 | ,, | 7-00 | ,, | சாலிம்பும், நித்ய கட்டளையும், கைங்கர்யங்களும் (ஏகாந்தம்) |
| 7-00 | ,, | 9-00 | ,, | அபிஷேகம் (ஆர்ஜிதம்) |
| 9-00 | ,, | 11-00 | ,, | அபிஷேகானந்தார தரிசனம் (ஆர்ஜிதம்) |
| 11-00 | ,, | 12-30 | மதியம் | சமர்ப்பணம் |
| 12-30 | ,, | 2-00 | மாலை | தோமால சேவை அர்ச்சனை மணி, பலி, சாத்துமுறை |
| 2-00 | ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 8-00 | ,, | 9-00 | ,, | சுத்தி இரவு கைங்கர்யங்கள் இரவு மணி |
| 9-00 | ,, | 11-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-00 | ,, | 11-30 | ,, | சுத்தி முதலியவை |
| | | 11-30 | | ஏகாந்தசேவை (ஏகாந்தம்) |

குறிப்பு : விழா நாட்களின்போதும், சிறப்பு நிகழ்ச்சிகளின் போதும் மேற்கூறிய நிகழ்ச்சி நிரல்கள் தேவையின் பொருட்டு மாற்றப்படும்.



सदा बालरूपापि विघ्नाद्रिहन्त्री महादन्तिवक्त्रापि पञ्चास्यमान्या ।
विधीन्द्रादिमृग्या गणेशाभिधाना विधत्तां श्रियं कापि कल्याणमूर्तिः ॥

ஸதா பால ரூபாபி। விக்நாத்ரி ஹந்த்ரி
மஹாதந்தி வக்த்ராபி பஞ்சாஸ்ய மாந்யா ।
விதீந்த்ராதி ம்ருக்யா கணேஸாபிதாநா
விதத்தாம் ஸ்ரியம் காபி கல்யாண மூர்த்தி: ॥

*எப்பொழுதும் குழந்தை வடிவமுள்ளதாயினும் இடையூறுகிய மலையைப் பிளக்கத்தக்க வலிவுள்ளதும் பெரிய யானையின் முகத்தையுடையதாயினும் சிங்கத்தால் அபிமானிக்கத் தக்கதும் (அதாவது:—'பஞ்சாஸ்ய' என்பதற்கு பரமேச்வரனால் அபிமானிக்கத்தக்கதும் என்பதாம்.) ப்ரம்மன், இந்திரன் முதலிய தேவர்களால் தேடத்தக்கதுமான கணேசர் எனப் பெயர் உள்ள அற்புதமூர்த்தியானது மங்களத்தைக் கொடுக்கட்டும்.*




# ஸப்தகிரி



மலர்: 9 செப்டம்பர் 1978 இதழ் 4

தனிப்பிரதி 50 காசு.
வருடச் சந்தா ரூ. 6

சிறப்பாசிரியர்:
திரு. பி. ஆனந்தராவ் முதலியார், B.SC., LL.B.,
செயலாட்சித்தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம். ஏ.
தி. தி. தேவஸ்தானம,
திருபபதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு,
Marketing Officer,
Publication Section,
T. T. D. Press Compound,
TIRUPATI-517501.

## உள்ளுறை



ஸ்ரீ விநாயகப் பெருமான், சித்திரம்: பேட்ட ஸ்ரீநிவாசலு ரெட்டி-திருப்பதி.

# ஆசிரியர் உரை

சமயத்தினையே வாழ்க்கையாகக் கொண்டு விளங்குபவர்கள் இந்துக்கள். சமய வாழ்வும் சமூக வாழ்வும் பழங்காலத் தொட்டே பின்னிப் பிணைந்தே விளங்குகின்றன. ஆகவேதான் சமய வழிபாட்டிற்கென இந்துக்கள் ஒரு குறிப்பிட்ட நேரத்தையோ, நாளையோ, சூழ்நிலையையோ ஒதுக்கவில்லை. சுழன்று வரும் சுழற்காற்றிலும், மிதந்து வரும் தென்றற் காற்றிலும் இறைவனின் சக்தியை தெரிந்து கொண்டவர்கள் இந்துக்கள். மனிதன் என்று இப்பூவுலகில் படைக்கப் பட்டானோ அன்றே, அவன், தன்னைப் படைத்துக்காக்கும் மாபெரும் சக்தி ஒன்று உண்டு என்பதை உணர்ந்தான். இவ்வுணர்வுக்கு அவன் ஒரு உருவம் கொடுக்கத் தொடங்கி பின்பு அதற்கு அஞ்சி, பிறகு அவ்வச்சமே அன்பாக, பக்தியாக மாற அதனை வழிபட ஆரம்பித்தான். அவன் அறிவு வளர்ச்சிக்கு ஏற்ப அவன் அமைத்துக் கொண்ட கடவுளர் உருவங்களும், வழிபடும் முறைகளும் அமைந்தன. ஆனால் இறைவனை எந்த உருவில், எந்த முறையில் வழிபட்டாலும் அவர்கள் உள்ளத்தில் குடி கொண்ட உணர்வு இறைவன் ஒருவனே என்ற பேருண்மைதான். மனித சக்திக்கு மீறியதும், மனிதர்களையும், மண்டலங்களையும் எண்ணி முடியாத அண்டங்களையும் படைத்துக் காத்து அழிக்கும் பரம்பொருளையே அவன் மனம் நாடியது. அப்பரம்பொருளை தாங்கள் வழிபடும் உருவங்களில் கண்டார்கள்.

அவ்வாறு கண்ட இந்துக்கள் தத்தம் கடவுளர்களுக்கு விண்ணை முட்டும் அளவுக்கு கோயில் எழுப்பி மகிழ்ந்தார்கள். ஆனால் ஒரு கடவுளரை மட்டும் ஏக மனதாக சமயப் பிரிவின்றி, இமயம் முதல் குமரி வரை உள்ள எல்லா இந்துக்களும் வழிபடுகின்றனர். அவர்தான் வானமே கூரையாகக் கொண்டு, 'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' எனும் முதுமொழிக்கு ஓர் உதாரணமாக விளங்கும் வகையில் அரச மரத்தடியாயினும் சரி, ஆற்றுப்படித்துறையாயினும் சரி தனக்கென இரண்டடிகளை மட்டும் தன் இருப்பிடமாகக் கொண்டு விளங்கும், 'தும்பிக்கை ஆழ்வார்' என்றும் ''விஷ்வக் சேனர்'' என்றும் வைணவர்களாலும் போற்றப்படும் விநாயகப் பெருமான் ஆவார். சமயப் பிரிவுகளாலும், வாழ்க்கையாலும் மொழியாலும் பிரிந்துள்ள இந்துக்கள், இந்தியச் சமய ஒருமைப் பாட்டிற்கு பெருமை சேர்க்கும் வகையில் இவ்விநாயகப் பெருமானை வழிபடுவதற்குக் காரணம் அவரது எளிமைக் கோல மட்டுமின்றி அவரது உருவமைப்பும்தான். முற்றும் துறந்த முனிவரானாலும் அவர் எப்போதும் சாப்பிட்டுக் கொண்டும் பெருத்த சரீரத்துடனும் விளங்கினால் அவர் மீது நமக்கு ஒரு ஈடுபாடு, ஒரு கவர்ச்சி தோன்றுவது கடினம். ஆனால் கண்டதைக் கேட்டும், எப்போதும் சாப்பிட்டுக் கொண்டும், 'மொழு மொழு'வென்று இருக்கும் ஒரு குழந்தையைக் கண்டால், நம்மையும் மீறி நம் கவனம் அதன்மீது செல்லும், ஏன், சற்று நின்று அதன் கன்னத்தைக் கிள்ளவே தோன்றும். அந்த நிலையில்தான் விநாயகரும் கோலம் கொண்டுள்ளார். மேலும் நம்மைக் கவருவது அவருடைய தலையாகும். ஏனெனின் சிறியோர் முதல் பெரியோர் வரை பல முறை பார்த்தும் அலுக்காதவைகளில் ஒன்றான யானையின் தலையை அவர் தம் தலையாகக் கொண்டுள்ளார். இவை போதும் ஒரு சாதாரண பக்தனின் மனதைக் கவர. ஆனால் அவ்வுருவம் கூறாமல் கூறும் தத்துவச் சின்னங்கள் அப்பக்தனின் சிந்தனைக்கு விருந்தாகும்.

விநாயகர் ஒரு பிரணவ ஸ்வரூபி. துதிக்கையுடன் இருக்கும் அவரது தலை. கையில் இருக்கும் மோதகம் இவற்றை இணைத்துப் பார்த்தால் பிரணவத்தின் வரிவடிவம் தோன்றும், அவருடைய மூன்று கண்கள் சந்திரனையும், சூரியனையும், அக்னியையும், ஐந்து கரங்கள் பஞ்ச கிருத்தியத்தையும், பாம்பினால் கட்டப்பட்ட அவருடைய பெரு வயிறு அண்டங்கள் யாவும் அவருள் அடக்கம் என்பதையும் குறிக்கும். கழுத்து வரை உள்ள அவரது மனித உருவமைப்பும், யானை தலையும் ஜீவ-பிரம்ம ஐக்கியத்தைக் காட்டுகிறது. தனக்கு ஒரு நாயகன் அற்றவன், அதாவது தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன் என்ற பொருளில் விநாயகர் என்றும், இகலோக விக்கினங்களை களைபவர் என்பதால் விக்கிநேஸ்வரர் என்றும் பெயர் கொண்ட அப்பெருமான் தன் அமர்ந்த கோலத்தின்மூலம், தன்னை நம்பிக்கையுடன் வழிபடும் பக்தர்களின் இதயத்தில் என்றும் நிரந்தரமாக வீற்றிருந்து அருள் பாலிப்பவன் என்பதைக் கூறாமல் கூறுகின்றார்.

எந்த கடவுளர்க்கும் இல்லாத மரியாதைக்குரிய 'ஆர்' எனும் விகுதியைப் பெற்று 'பிள்ளையார்' என்ற சிறப்புப் பெயருடனும், எல்லா சமயப் பிரிவுகளைச் சார்ந்த இந்துக்களுடைய சமயம் மற்றும் சமூக விழாக்களில் முதற்கடவுளாக வழிபடும் பெருமையுடைய பக்தப்பிரியரான இத்தும்பிக்கையாழ்வார் பிராணிகளில் சிறியதான மூஞ்சூறினைத் தன் வாகனமாகக் கொண்டதன்மூலம் இறைவனால் படைக்கப்பட்ட எவ்வுயிரும் அற்பமானதல்ல என்பதையும், உருவத்தில் பெரியதான யானைத் தலையைக் கொண்டதன்மூலம் சிறியது முதல் பெரியது வரை எல்லா உயிர்களும் அவருக்குள் அடக்கம் என்பதையும் கூறுகிறார். மயிலுக்கு அழகு அதன் தோகையில் தான்; சவரிமானுக்கு மதிப்பு அதன் வாலில்தான். அதுபோல யானையின் கம்பீரம் அதன் தந்தங்களில் தான். அத்தகு அழகு சேர்க்கும் தந்தங்களில் ஒன்றினை மகாபாரதம் எழுத மடக்கென்று அவர் ஒடித்தது, 'நான்' 'எனது' என்ற தன்னலப்பற்றை விடுவதன் அவசியத்தையும், யாக்கை நிலையாமையையும் உணர்த்தவேயாம்.

இத்தகு பெருமையுடைய, ஆனந்தமயமான, சச்சிதானந்த ஸ்வரூபியான, குணங்கடந்த, தேகங்கடந்த, காலங்கடந்த, முத்தொழில் புரியும் விநாயகர்க்குரிய விழாநாளான ஆவணி மாத வளர்பிறை சதுர்த்தி நாளன்று, 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற அருளுணர்வு மேலும் மேலோங்கிட, இம்மை வாழ்வில் நாம் இன்னல்கள் இன்றி வாழ்ந்திட, மறுமை வாழ்வுக்குரிய முக்தி நெறி பெற்றிட விநாயகரை வணங்கி வளம் பல பெறுவோம்.

# செய்திச் சுருக்கம்

## ஸ்ரீ அன்னமாச்சார்யா இசை வகுப்புக்களின் ஆரம்ப விழா

திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா இசை நாட்டியக் கல்லூரியின் ஆதரவில் திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் ஸ்ரீ தாள்ளபாக்கம் அன்னமாச்சார்யா கீர்த்தனைகளின் இலவச வகுப்புக்களை 27-7-78 அன்று தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. ஆனந்தராவ் முதலியார் அவர்கள் ஆரம்பித்து வைத்தார். இதை ஒட்டி அன்று மாலை 6 மணி அளவில் எளிய விழா ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டது. குமாரி. பத்மா ராணியின் இறைவணக்கப்பாடலைத் தொடர்ந்து தேவஸ்தான சதஸ் கலைஞரான குமாரி ஆர். ஜி. ஷோபா ராஜு கூட்டத்தினரை வரவேற்றுப் பேசுகையில் தன்னைத் தேவஸ்தான சதஸ் கலைஞராக நியமித்து இவ்இசை வகுப்புக்களைத் தான் ஏற்று நடத்த தனக்கு ஒரு வாய்ப்பினை அளித்த மேலாண்மைக்கு நன்றி தெரிவித்து, பின்னர் தொடர்ந்து பேசுகையில் அன்னமாச்சார்யா கீர்த்தனைகளின் இலக்கிய,பக்தி பண்புக்கூறுகளைப்பற்றி விளக்கமாகப்பேசினார். பின்னர் அன்னமாச்சார்யா கவிதைகளில் பொதிந்து கிடக்கும் இலக்கிய நயங்களைப் பற்றி ஆராய்ச்சி செய்து கொண்டு வரும் திரு. காமிசெட்டி ஸ்ரீநிவாசலுசெட்டி அவர்கள் தாள்ளபாக்க ஸ்ரீ அன்னமய்யாவின் வாழ்க்கை வரலாற்றினை விளக்கிக்கூறி இன்றைய இளம் பாடகர்கள், குறிப்பாக திருப்பதி இசைக் கல்லூரியில் பயின்ற, மற்றும் பயிற்சி பெற்று வரும் கலைஞர்கள் அன்னமய்யாவின் கீர்த்தனைகளின் பெருமையை நாடெங்கிலும் பரவச் செய்யும் வகையில் முயற்சிகளை முழுமூச்சாக மேற்கொள்ளவேண்டும் என்று அறிவுரை கூறினா. அடுத்து தி.தி. தேவஸ்தான செயலாட்சித்தலைவர் திரு. பி. ஆனந்தராவ் முதலியார் அவர்கள் இசை வகுப்புக்களைத் தொடக்கி வைத்துப் பேசுகையில் இசையோடு தனக்கு அவ்வளவாகத் தொடர்பு இல்லை என்று குறிப்பிட்டு, இருப்பினும் 95 ஆண்டு காலம் வரை வாழ்ந்து, சுமார் 32,000 கீர்த்தனைகளை அவ்வேங்கடவன் மீது பொழிய விட்டுச் சென்ற ஸ்ரீ அன்னமய்யாவின் புகழ் நாடெங்கிலும், ஏன் உலகெங்கும் பரவிட முயற்சிகள் மேற்கொள்ளப்படவேண்டும் என்றும், அவ்வகையில் அன்னாரின் கீர்த்தனைகளைப் பயில இளம் பாடகர்கள் மிக உற்சாகமாகமுன்வரவேண்டும் என்றும் அதற்கு தன் உதவி என்றென்றும் உண்டு என்றும் கூறினர். பின்னர் ரிஷிகேஷிலுள்ள தி. தி. தேவஸ்தான ஆந்திர ஆஷ்ரமத்தின் மேலாளரான திரு. பி. கனகபூஷணம் அவர்கள் இவ்விழாவில் பங்கேற்றுப் பேசுகையில், அன்னமய்யாவின் கீர்த்தனைகளின் புகழ் பரப்பும் பணியில் தேவஸ்தானம் அதிகம் கவனம் செலுத்தும் வகையில் அதற்கென்று குழு ஒன்று அமைத்து, அதிக நிதி உதவி அளித்து, மேலும், வடஇந்தியாவில் தென்னிந்திய இசை மற்றும் பக்தி இலக்கியத்தின் பெருமையைப் பரப்ப ஆவன செய்தல் வேண்டும் என்றார்.

பிறகு, திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா இசை நாட்டியக் கல்லூரியின் முதல்வர். திரு. டி. பசுபதி அவர்கள் பேசுகையில், அன்னமய்யா கீர்த்தனைகளில் பயிற்சி பெற்ற இளம் பாடகர்களை, இந்தியாவில் அங்கங்குள்ள தி. தி தேவஸ்தான தகவலறிவிப்பு நிலையங்களில் நியமித்து, அவர்களைக் கொண்டு, கலைநிகழ்ச்சி நிரல்களின் கீழ் அன்னமய்யா கீர்த்தனைகள் சம்பந்தப்பட்ட கச்சேரிகளை ஏற்பாடு செய்யவேண்டும் என்று மேலாண்மையைக் கேட்டுக் கொண்டு, தொடர்ந்து பேசுகையில் புகழ்பெற்ற கீர்த்தனைகளுக்குப் பெரியோர் அமைத்த பண்வகைகளை தொடர்ந்து வரும் மற்றவர்கள் மாற்றஞ் செய்யக்கூடாது என்றும் அவ்வாறு செய்வது அப்பெரியோர்க்கு செய்யும் அவமரியாதையாகும் என்றும் கூறினர். இறுதியில் கல்லூரியின் வயலின் விரிவுரையாளர் திரு. ராமனாதன் அவர்கள் நன்றி நவின்றார்.

## திருச்சானூரில் ஆர்ஜித ஊஞ்சல் சேவை

திருப்பதிக்கு அருகே உள்ள திருச்சானூரில் ஸ்ரீபத்மாவதி அம்மையார் கோயிலில் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் ஊஞ்சல் சேவை நடைபெறுகின்றது. ரூ. 150 செலுத்தி, இறைவியின் திருவீதி வலம் பிறகு நடத்தப்படும் இவ்வூஞ்சல் சேவையில் யாத்திரிகர்கள் பங்கேற்கலாம். கிருஹஸ்தரைச் சார்ந்த நான்கு நபர்கள் கண்ணாடி அறையில்அமர்ந்து இவ்ஊஞ்சல் சேவையை கண்டு களிக்கலாம். அதிகமாக வரும் நபர்கள் (கிருஹஸ்தரைச் சார்ந்த) இச்சேவையைக் காண வேண்டுமாயின் நபர் ஒருவருக்கு ரூ. 25/- செலுத்தவேண்டும்.

## திருமலையில் தென்மண்டல அறநிலைய ஆணையர் மாநாடு

திருமலையில் 30-7-78, 31-7-78 தேதிகளில் ஆந்திரப் பிரதேசம், கர்

(37-ம் பக்கம் பார்க்க)

### சந்தாதாரர்களுக்கு . . .

31-10-78 ஆம் தேதியுடன் சந்தாக காலம் முடிவடையும சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. ஆகவே அவ்வெண்கள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக் குறித்துக கொண்டு தாங்கள் செலுத்த வேணடிய தொகையைச் செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும். T

23, 243, 280, 288, 294, 429, 428, 538, 607, 729, 836, 864, 866, 882, 885, 887, 893, 903, 914, 1309, 1369, 1372, 1407, 1410, 1416, 1418, 1419, 1420, 1422, 1425, 1429, 1437, 2096, 2098 முதல் 2110 வரை, 2112, 2113, 2115, 2116, 2117, 2118, 2119, 2121 முதல் 2127 வரை, 2129 முதல் 2141 வரை, 2143 முதல் 2178 வரை, 2180 முதல் 2192 வரை, 2194, 2195, 2279:

# வாழ்வின் அடிப்படை

'ஆலம்'

*[எந்தச் செயலையுமே பொருளுணராது, கண் மூடித்தனமாகச் செய்தால் ஒரு பயனும் இராது என்னும் கருத்தை நயத்துடன் விளக்கும் எழிலார்ந்த உபநிஷதக்கதை, உஷஸ்தி சாக்ராயணரின் கதை]*

குரு நாட்டில் யானைப் பாகர்கள் மிகுதியாக வசித்துவந்த ஒரு கிராமம். அதன் பெயர் இப்யம். அங்கு, வழுவில்லாது வேதம் பயின்ற உஷஸ்தி சாக்ராயணர், ஆடிகி என்னும் இளம் மனைவியுடன் இல்லறம் நடத்தி வந்தார். ஏழைகளேயாயினும் அவர்களின் வாழ்க்கை இனிதே நடந்து வந்தது.

ஒரு சமயம் வெட்டுக்கிளிகள் கூட்டம் கூட்டமாக வந்துபயிர்கள் அனைத்தையும் அழித்து விட்டன. எனவே, அங்கு கொடிய பஞ்சம் ஏற்பட்டது. சமயச் சடங்குகளைக் கூட மக்களால் சரிவரச் செய்ய முடியவில்லை. ஆதலால், அவற்றை நம்பியிருந்த உஷஸ்தியும் அவர் மனைவியும் பெரிதும் துயருற்றனர். அவர்கள் பலநாள் பட்டினி கிடக்கவும் நேரிட்டது.

ஒருநாள் பசிதாங்காமல் உஷஸ்தி ஒரு யானைப்பாகனின் வீட்டிற்குச் சென்றார். அப்போது, யானைப்பாகன் சாப்பிடுவதற்கு வேறு எதுவும் இல்லாமற் போகவே வேகவைத்த பயற்றைத் தின்று கொண்டிருந்தான். உஷஸ்தி அவனை அணுகி, தமக்கும் சிறிது உணவு தருமாறு கேட்டார்.

யானைப்பாகன் ''ஐயா! எச்சிலான இத்தட்டிலுள்ளதைத் தவிர வேறு உணவு எதுவும் என்னிடம் இல்லையே! உமக்கு ஆட்சேபனை இல்லை என்றால் இதைப் பகிர்ந்து கொள்ளவும். எனக்கும் மகிழ்ச்சியாக இருக்கும்'' என்று பணிவுடன் கூறினான்.

உஷஸ்தி ''ஆபத்திற்குக் குற்றமில்லை'' என்று சொல்லிவிட்டு, அத்தட்டிலிருந்த பயற்றில் சிறிது எடுத்து உண்டார். அவர் பசியும் சற்றே அடங்கியது. பசியின் களைப்பு நீங்கிய அவரிடம் ''இதோ, இப்பாத்திரத்திலுள்ள நீரையும் சிறிது பருகவும்'' என்று யானைப்பாகன் தான் எச்சில் படுத்திய நீர்க்கலத்தை அவரிடம் நீட்டினான். ஆனால், ''அது எச்சில்'' எனக் கூறி அவர் மறுத்து விட்டது அவனுக்கு வியப்பளித்தது. ''எச்சிலான பயற்றை மட்டும் தின்றீரே! நீரை மட்டும் ஏன் வேண்டாம் என்று மறுக்கிறீர்?'' என்று அவன் கேட்டான்.

''நான் உயிருடன் இருப்பதற்குத் தவிர்க்க முடியாத தேவையாக இருந்தது எச்சில் பயறு. ஆனால், நீர் இல்லாமல் இன்னும் சிறிது காலம் என்னால் உயிருடன் இருக்கமுடியும். விதிகளிலிருந்து விலக்கு என்பது தவிர்க்க முடியாத நிலைகளில் மட்டுமே'' என்று விளக்கினார் உஷஸ்தி. மேலும், அவர் சாப்பிட்டது போக எஞ்சியிருந்த பயற்றைத்தமது இளம் மனைவிக்கென அவர் வீட்டுக்கு எடுத்துச் சென்றபோது யானைப் பாகனுக்கு உஷஸ்தியிடம் மேலும் மிகுந்த மதிப்பு உண்டாயிற்று.

வீடு திரும்பிய உஷஸ்தி தமது மனைவியிடம் தாம் கொணர்ந்திருந்த பயற்றைக் கொடுத்தார். ஆனால், ஏற்கனவேயே எங்கிருந்தோ சிறிது உணவைப்பெற்று ஒருவாறு பசியாற்றிக் கொண்ட அம்மங்கை நல்லாள் அவர் கொடுத்த பயற்றைப் பத்திரமாக எடுத்து வைத்தாள்.

மறுநாள் பொழுது விடிந்தவுடன் உஷஸ்தி தமது இனிய மனைவியிடம் ''தின்பதற்கு ஏதேனும் இருந்தால், சற்றேனும் பசியைத் தணித்துக் கொண்டு, ஏதாவது பொருள் தேடப் போகலாம். அரசன் வேள்வி ஒன்று செய்யப் போவதாகக் கேள்விப்பட்டேன். ஒரு வேளை அதிர்ஷ்டவசமாக என்னையே கூடப் புரோகிதராக வைத்துக் கொண்டால், தட்சிணை கணிசமாகக் கிடைக்கும்'' என்று சொன்னபோது அவள் முதல்நாள் அவர் கொணர்ந்த பயற்றைத் தான் சாப்பிடவில்லை எனச் சொல்லி, அதை அவரிடம் கொடுத்தாள். அருமை மனைவியின் பேரன்பினால் நெகிழ்ந்து மகிழ்ந்த உஷஸ்தி அதைத் தின்று விட்டு வேள்விச் சாலைக்குப் புறப்பட்டார்.

வேள்விச் சாலையில் பிரஸ்தோதா (பிரஸ்தாவம் அல்லது தொடக்கத் துதி பாடுபவர்) உத்கீதா (உத்கீதை அல்லது எழுச்சித்துதி பாடுபவர்), பிரதிஹர்த்தா (பிரதிஹாரம் அல்லது இறுதித் துதிபாடுபவர்) ஆகியோர் வேதம் ஓதிக்கொண்டிருந்தனர். அவர்கள் அருகில் சென்று உஷஸ்தி அமர்ந்து கொண்டார். அவர் முகத்தில் காணப்பட்ட அறிவொளி அனைவரையும் கவர்ந்தது.

பிரஸ்தோதாவிடம் ''நீர் பாடும் பிரஸ்தாவம் என்னும் துதிக்குரிய தேவதை யார் என்பதைத் தெரிந்து கொள்ளாது நீர் அதை ஓதினால் உமது தலை கீழே விழுந்து விடும்'' என்று உரைத்தார். அங்ஙனமே உத்கீதாவிடமும் பிரதிஹர்த்தாவிடமும் அவர் கூறினார். இதைக் கேட்ட அவர்கள் திகைப்படைந்து செய்வதறியாது கலக்கமடைந்தனர். நடந்ததைக் கவனித்த வேள்விக்கு எசமானனான அரசன் உஷஸ்தியிடம் வணக்கத்துடன் ,'மதிப்புக்குரிய அந்தணரே! தாங்கள் யார் என்பதை நாங்கள் தெரிந்து கொள்ளலாமா?'' என வினவினான்.

(36-ம் பக்கம் பார்க்க)

தொடர் கட்டுரை :

# முக்கவி கண்ட காப்பியம்

## "சுந்தர காண்டம்"

திரு. டி. ஜி. அனந்த சுப்ரமண்யம்,
(காபேயன்)
திருப்பதி.

எழில் மிகுந்த உருவத்தையுடையவளும், அழகான அணிகலன்களை அணிந்திருப்பவளுமான மந்தோதரியைச் சீதையென்று அனுமன் சந்தேகித்தான். இந்தக் கருத்தையே கம்பர் வேறு விதமாகக் கூறுகிறார்.

"இன்ன தன்மையின் எரி மணி விளக்கங்கள்
எழில் கெடப் பொலிகின்ற
தன்னது இன் ஒளி தழைப்புறத் துயில்வுறு
தையலை தகைவு இல்லான்
அன்னள் ஆகிய ஜானகி இவள் என அயிர்த்து
அகத்து எழு வெந்தீ
துன்னும் ஆர் உயிர் உடலொடும் சுடுவது
ஓர் துயர் உழந்து இவை சொன்னான்."

இம்மந்தோதரியைச் சீதையென்று சந்தேகித்த ஹநுமான் இவள் அவ் இலங்கையில் அந்நகரில் திவ்யமான ஒரு மாளிகையில் சிறிதும் கவலையின்றிப் புஷ்ப சயனத்திலே இனிது துயில்வதை மனதிற்கொண்டு மிக்க கோபத்தையும், வருத்தத்தையும் அடைந்தான். பிறகு ஹனுமன் கொஞ்சம் சிந்தித்து,

"இராமனை விட்டுப் பிரிந்து, சீதை தூங்கமாட்டாள். மூன்று லோகங்களிலும் இராமனுக்குச் சமமாக எவனாவது இருக்கிறானா? இராமனைவிட்டுசீதை எதையும் செய்துகொள்ளமாட்டாள். இராமனைத் தவிர வேறு எத்தகைய தேவன் வந்தால்கூட பார்க்கமாட்டாள். மேலும் இராமன் இல்லாமல் இவ்வளவு அணிகலன்களையும் அணியமாட்டாள். ஆகையால் இவள் சீதையாக இருக்கமுடியாது". என்று தீர்மானித்து மற்ற இடங்களுக்குத் தேடச் சென்றார்: இந்தக் கருத்தைக் கம்பர் வேறு விதமாகச் சொல்லுகிறார்.

"மானுயர்த் திருவடிவினள் இவள்
மாறு கொண்டனள்கூறின்
தான் இயக்கியோ தானவர்தையலோ
ஐயுறுந்தகையாளுள்
கான் உயர்த்த தார் இராமன் மேல்
நோக்கிய காதல் காரிகையார்க்கு
மீன் உயர்த்தவன் மருங்கு தான்
மீளுமோ நினைந்தது மிகை
யென்றான்."

இவ்விடத்தில் கம்பர் ஒரு விசேஷம் கூறுகிறார். அதாவது அங்குப் படுத்திருக்கும் பெண் மனித உருவில் காணப்படவில்லை. ஆகையால் இவள் சீதையாக இருக்க முடியாது என்று. ஆனால் வால்மீகி கூறியதற்கும் கம்பர் கூறியதற்கும் ஒரு வித்யாசம் உண்டு. வால்மீகி கூறும்பொழுது மந்தோதரி பதிவ்ரதைகளில்ஒருவள், நேர்மையானவள், உயர் குடியில் பிறந்தவள், தன் கணவனை இராவணனைப் பல முறை திருத்துவதற்காக முயற்சி செய்தவள். ஆகையால் அவள் சீதையைப்போல் காக்ஷியளித்தாள் என்று கூறுகிறார். கம்பரோவெனில் "என்ன இருந்தாலும் மந்தோதரி அரக்கர் குலத்தைச் சேர்ந்தவள்தானே" என்று கூறுகிறார். சக்ரவர்த்தித் திருமகனை இராமனுக்கு வாழ்க்கைப்பட்ட சீதை மனித வடிவமாயுள்ளவளென்பது எல்லோரும் அறிந்ததே. மந்தோதரி அஸுர தச்சனின் மகள் என்பதும் அறிந்த விஷயம். இங்கு மனித வடிவம் போல் இல்லாமையால் அவள் சீதையல்ல என்று கருதினான் ஹநுமான். புருஷோத்தமனாகிய இராமனுடைய திருமேனியழகைக் கண்டு காதலித்தவள் வேற்று மனிதரின் மனம் செல்லமாட்டாளென்பதால் இவள் பிராட்டியல்லளென்று நிச்சயித்தான். மந்தோதரியின் நிலைமையை நினைத்து அவளுக்கு நேரப்போகும் தீங்கை ஹனுமான் கூறுகிறான்

"இலக்கணங்களுஞ் சில உள என்
னினும் எல்லை சென்று இறுக்
கில்லா
அலக்கண் எய்வது அணியது உண்டு
என்று எடுத்து அறைகுவது
இவள் யாக்கை
மலர்க் கருங்குழல் சோர்ந்து வாய்
வெரீ இச் சில மாற்றங்கள் பறை
கின்றாள்
உலக்கும் இங்கு இவள் கணவனும்
அழிவும் இவ்வியல் நகர்க்கு
உளதென்றான்."

உத்தம ஸ்திரீகளுக்குரிய இலக்கணங்கள் சில இவளுடம்பில் காணப்பட்டாலும், இப்பொழுது இவளுடம்பில் தோன்றுகின்ற அவலக்ஷணங்கள் இவள் விரைவில் எல்லையில்லாத பெருந் துன்பத்தை யடைவளென்று தெரிவிக்கின்றன. மேலும் இவள் தூங்கும்போது தலை முடி அவிழத் தீய சொற்களைவாய்பிதற்றுதலால், இவள் கணவனுக்கும் இவள் வசிப்பதும், அவள் கணவன் ஆள்வதுமான இப்பெருநகரத்திற்கும் கேடு சமீபத்திருக்கின்றதாகத் தெரிகின்றது" என்று ஹநுமான் எண்ணினான். இக்கருத்து வால்மீகியில் காணப்படவில்லை.

(தொடரும்)



# அன்னமய்யா கீர்த்தனைகள் - 1

பண்ணமைத்தவர் : திரு. ஜி. பாலகிருஷ்ணபிரசாத், ஹைதராபாத்.

3 3 4 4 3
## மங்காம்புதி ஹனுமந்தா – தர்மவதி ராகம் – ஆதிதாளம்

3 3 4 3 3 3 4
ப:— மங்காம்புதி ஹனுமந்தா நீ ஸரண – மங்கவிஞ்சிதிமி ஹனுமந்தா (மங்காம்புதி)
(மங்காம்புதியில் வதியும் ஹனுமனே! உன்னைச் சரணடைந்தோம்.)

3 3 3 2
ச:— பாலார்க பிம்பமு பலமனி பட்டின – அலரி சேதல ஹனுமந்தா
(கனியென எண்ணி இளம்பரிதியை கைகொண்டு பிடிக்க முற்பட்ட
விளையாட்டுப் பிள்ளையே.)

3 3 3 3 4
தூலனி ப்ரஹ்மாதுலசே வரமுலு – ஒலி சேகொனின ஹனுமந்தா (மங்காம்புதி)
(மாபெரும் மாமுனிவர்களிடமிருந்து இலவசமாக வரங்கள்பல பெற்றவனே)

4 3
ச:— ஜலனிதி தாட நீ ஸத்வமு கபுலகு – அலரி தெலிபிதிவி ஹனுமந்தா...
(கரையில்லாக் கடலைக் கடந்து, உன் ஆற்றலைப் பிறருக்கும் அறிவித்த வித்தகனே)

3 3 3 4 3 3 4
இலயு நாகஸமு ஏகமுகா இடு – பலிமி பெரிகிதிவி பளி ஹனுமந்தா (மங்காம்புதி)
(பேருருவம் கொண்டு விண்ணையும் மண்ணையும் இணைத்த இணையற்றவனே)

ச;— பாதாளமு லோபலி மைராவணு – ஆதல சம்பின ஹனுமந்தா
(அன்று பாதாளம் சென்று மைராவணனை மாய்த்து மாண்புற்ற நீ)

3 3 3 4
சேதுலு மோட்சுக ஸ்ரீ வேங்கடபதி – ஈதல கொலிசே ஹித ஹனுமந்தா (மங்காம்புதி)
(இன்று கைகட்டி வாய்பொத்தி வேங்கடவன் முன் சிலையென நிற்கின்றாயே)

ப:— மா கா ரிஸ நிஸ | ரீ ஸா | நீ, ஸ ரி க ||
மங் காம் பு தி ஹனு | மந் தா | நீ. ஸ ர ண ||

மா க மா ம ப ப | , பதா பா, | ப ம க ரி ஸரிகா ||
மங் க விஞ் சி தி மி | . ஹனு மந் | தா . . . . . . ||

[மங்காம்புதி..... ...ஸரண] மா க மா ம பநிதநி | , த ஸ நீ தபா | பம கரி ஸரிகா ||
மங்க வித் சி தி . மி. | . . ஹனு ம ந் | தா . . . . . ||

3 3 4
(மங்காம்புதி)

ச:— நீ, பா த நீ நிநி | ; பக்ாரிஸ்ா | ஸ் த நீ ஸ் ஸ் ||
பாலார்க பிம் பமு | ப ல ம னி | ப ட் டி ன ||

; ஸ் நீ ஸ் ரீ க் ரீ | ; ரி க் ா ரி ஸ் ா | ரி க் ரி க் ஸ் ரீ, , ||
. அ ல ரி சே த ல | ஹ னு ம ந் . . | த ா . . . ||

2. ரி க் ரி நி ரி நி த நி த ம த ம க் ரி ஸ் நி | த நி பக்ா ரிஸ்ா | ஸ் த நீ ஸ் ஸ் ||
பா . . ல . ர் க - . பிம் . ப . மு . | . . ப ல ம நி | ப . ட் டி ன ||
அலரி சேதல......

3. க் ம் ா க் ரி ஸ் ஸ் க் ரி ஸ் நி த த நீ த | ப ம ப க் ா ரி ஸ் ா | ஸ் த நீ ஸ் ஸ் ||
ப . . ல . ர் க . . பி ம் . ப . மு | . . ப ல . ம னி | ப . ட் டி ன ||
அலரி சேதல......

;, ம்ா ம் ம்ா க் ம் க் ரி ஸ்ா ; | ; ஸ் ரீ ஸ் நி தா | நீ த ம த த ||
து . ல னி ப் ர ம் . ஹா | து ல சே . . | வ ர . மு லு ||

; , நீ நி நீ ; த ப மப | த நி ஸ் நி த ப மத | ப ம க ரி ஸ ரி க ம ||
ஒ லி சே கொ னி ன | . . ஹ . னு . மன் | . . தா . . . . ||

ஸோல் கட்டு ஸ்வரம் :— (மேலைக்காலம்)

பா , பமக மா , மகரி கா , க| ரிஸ ரீ , ரிஸநி | ஸா , ஸரிஸநீ ||
பா . பமக தாம்தகிட கா . க| ரிஸ ஜம்தகிட | தோம் ஸரிதஜம் ||

, ஸரீகா , ரிஸா , ரிகாமா | , கரீ , கமா | பா , மகரி கம ||
. ஸரீகா . தஜம் ரிகாமா | . தஜம் கமா | பா கிணத கம ||

பா பமகமபதா தபமபதநீ | நிதபதநிஸ்ா ஸ் | நிதநிஸ்ரீ—க்ரி ||
பா குகுன்தமபதா தணகுபதநீ | தரிததநிஸா ஜ | ணுதநிஸரீ—குகுன்

நி தமத நீ; தா; ரிநிதம கம தா; மா | ; நிதமகரிக || (மாகாரிஸ)
த தணகு நீ தா தணகுத | ரித தா மா | தரித ஜணுத || (மங்காம்புதி)

ச:— ; பா ,பா, பபபா | பப , மநி | தநிநித பப ||
பா தாளமுலோ| பலி மை | ரா . . . வணு ||

; மதாமகா ;ரிகாரிஸா | :நிஸாரிகா | கரி ரீ , ||
ஆ . தல சம்பின | ஹனுமந் | தா . ||

;, தாததா தநிநித பம | ;பதாநிஸ்ா | தநிஸ்ஸ் ||
சேதுலு மோ . . ட் சுக | ஸ்ரீ . வேங் | கடபதி ||

; நிரீநிதா பப மபதநி | , த நிதாபபத | பமகரி ஸரிகம ||
. ஈ . த ல கொலிசே . . . | . . ஹிதஹனு | மந் . . தா . . ||

திரும்பி ஸோல்கட்டு ஸ்வரம் பாடிய பிறகு பல்லவி பாடவேண்டும்.

# வாழ்க்கை நெறி

திரு. ராமசுவாமி கோவிந்தன்,
மஞ்சாகுப்பம்—கடலூர்-1.

மக்கள் வாழவேண்டிய நெறியை பெரியோர்களின் வாக்கினைக் கொண்டு விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

பரமாச்சாரியரான எம்பெருமானார் தான் பரமபதம் ஏக திருவுள்ளம் கொண்டிருந்த பொழுது தன் அந்தரங்க அடியார்களுக்குக் கடைசியாக உபதேசித்தது ''ஒருவன் பிரபன்னனானால் அவன் தேகயாத்திரை கர்மாதீனம் ஆகையினால் அதற்கு கரையவேண்டா, கரைந்தானாகில் நாஸ்திகனும் இத்தனை''. இதனால் ஏற்படுவது யாதெனில் ஒருவனுக்கு இப்பிறவியில் நிகழ்வனயாவும் அவன் முன் செய்த கருமத்தின் பலனேயாகும். வினையென்றவுடனேயே அது ஏதோ பயங்கரமானதொன்று என்று பலர் கருதுகிறார்கள். ஒரு தமிழ்ப் பெரியார் (இரட்டியப் பட்டி சுவாமிகள்) கூறுவதைக் கவனிப்போம். ''வினையை அனுபவித்து தீர்த்து அறியாமை நீங்க பெறுவதற்காகவே உயிருக்கு உடல் கொடுக்கப்பட்டிருக்கிறது. எவ்வளவு வினையை நுகர்ந்து முடிக்கக் கருதி எந்தையினாலே ஒரு உயிருக்கு ஒரு தேகம் தரப்பெற்றதோ அவ்வளவு வினையும் நுகர்ந்து முடிந்த பின் ஒரு வினாடிகூட அச்சடலத்தில் அவ்வுயிர் தங்கியிருக்காது. ஒவ்வொரு உயிருக்கும் எவ்வெக் காலத்தில் எது செய்தால் நன்மையாயிருக்கும் என்று கூர்ந்து அறிந்து பரம காருண்ய மூர்த்தியான ஆண்டவன் அனுபவித்தே தீர்க்கவேண்டியவையான கருமங்களை உயிர்கள் அனுபவிக்ககொடுக்கும். இதை அறியாமல் ஒருவன் வருந்துவானாகில் அவன் கடவுளின் அற நேர்மையையும் அருள் தன்மையையும் மறந்துவிடுவதற்கு ஒப்பாகும்''. அவர் இன்னும் ஒரு படிமேலே சென்று ''நமக்கு வரும் நோய்கள் நமது சொந்த வினையின் பயனாக வருகின்றன. வினையை நுகர்ந்து தீர்ப்பதற்காக வரும் நோயை மருந்து கொடுத்து தீர்க்க முயல்வது மேலும் வினையைப் பெருக்கிக் கொள்வதாகும்'' என்கிறார்.

ஆத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள நவவித சம்பந்தங்களில் ''சுவாமி'' ''சுவம்'' சம்பந்தமும் ஒன்று. அதாவது அவன் நமக்கு சுவாமி. நாம் அவனுக்கு சுவம் (உடைமை). சொத்தைக் காக்கும் பொறுப்பு சுவாமியினுடையது. இதை ஒருவன் நன்றாக அறிந்தால் நமக்கு ஏற்படும் சுக துக்கங்களில் ஆனந்தமோ, அச்சமோ கொண்டு அல்லல் உறாமல் சம நிலையையே உடையவனாக இருப்பான். அவன்தான் ஸ்தித பிரஜ்ஞன். தன்னுடைய தேகயாத்திரையை ஆண்டவனிடம் ஒப்படைத்துவிட்டு தான் சுகமாகவே இருப்பான். அவனை ''வாழும் சோம்பர்'' என்கிறார் ஆழ்வார். நாம் இங்கு ஓர் உதாரணத்தைக் கவனிப்போம். ஒருவன் ஓர் ஆழ்ந்த நீர் நிலையில் வீழ்ந்துவிடுகிறான். அவனுக்கு நீந்தத் தெரியாது. நீந்திக் கரையேற முடியாது. அவனுக்கு உதவி செய்வார் யாருமில்லையென்றால் அவன் நீரில் மூழ்கி இறக்க வேண்டியதுதான். ஆனால் அவன் வீழ்ந்ததை ஒரு நண்பன் பார்த்துவிடுகிறான். அவன் பலசாலி. நீந்தத்தெரிந்தவன். அவன் தன் நண்பனைக் காப்பதற்காக நீரில் குதித்துவிடுகிறான். அவன் நீச்சல் கலையில் வல்லவன் ஆகையினாலே நீரில் மூழ்கி உயிருக்கு போராடிக் கொண்டிருக்கும் ஒருவனுக்கு சமீபத்தில் போகக் கூடாது என்பது தெரியும். அப்படிச் சென்றால் அவன் காப்பாற்ற வந்தவனையும் சேர்த்து தண்ணீரில் அழுத்துவான். ஆகவே அவன் தூரத்திலிருந்து கொண்டு ஏற்கனவே உயிருக்குப் போராடிக் கொண்டிருக்கும் நண்பனின் முகத்தில் தண்ணீரால் அடிக்கிறான். அவன் பின்புறமாகச் சென்று தலையில் ஓங்கி அறைகிறான். இச்செய்கையெல்லாம் மூழ்கிக் கொண்டிருப்பவனுக்கு விபரீதமாக இருக்கிறது. ஆனால் நண்பன் ஏன் இவ்வாறு செய்தான். அவனை சாகடிக்கவா? இல்லை காப்பாற்ற. தண்ணீரில் தத்

தளிப்பவன் காப்பாற்ற வருகிறவனை காப்பாற்ற முடியாதபடி தடுக்கலாம் அல்லது தானும் தப்ப முயற்சி செய்வதாக நினைத்து நண்பனின் கையிலிருந்து நழுவிவிடலாம். ஆகவே அவனைக் காப்பாற்ற வேண்டும் என்ற பரம கிருபையினால் நண்பன் அவனை அறைந்து அடித்து மயக்கமடையச் செய்து அவனைக் காப்பாற்றுகிறான். அதுபோல சம்சாரமாகிய பெருங் கடலில் வழுக்கி விழுந்து தத்தளித்துக் கொண்டிருக்கும் உயிர்களைக் காப்பாற்ற வேண்டியது சுவாமியின் கடமையல்லவா. அவன் நம்மைக் காக்கும் முயற்சியில் ஈடுபட்டுச் சில காரியங்களைச் செய்வது நமக்கு விபரீதமாகப் படலாம். விதி தன்னைப் பழி வாங்குகின்றது என்று நினைக்கலாம். மனிதன் தான் அறிவிழந்து செயலிழந்து கிடக்கிறானே. சரண்யனுடைய பூரண இரட்சகத்துக்கு விட்டுவிடுவதே சரணாகதனுடைய கடமை. இவ்வாறு கூறுவதால் துன்பம் வராமல் தடுத்துக் கொள்ளவோ வந்த துன்பங்களில் இருந்து விடுதலை பெற முயற்சிக்கவோ வேண்டாம் என்பதாக பொருள் இல்லை. ஒவ்வொருவராலும் மனித முயற்சியினால் எவ்வளவு கூடுமோ அவ்வளவும் செய்யப்படுதல் வேண்டும். ஆனால் பலனில்தான் கவலை கொள்ளலாகாது. இவன் தன் இரட்சகத்தின் பொருட்டுசரண்யனிடமிருந்து விலகிச் சென்றாலும் அல்லது தானும் ஏதேனும் செய்ய வேண்டுமென்று முயற்சித்தாலும் சரண்யம் நழுவிவிடும். அனுமன் பேரில் இந்திரஜித்தன் பிரம்மாஸ்த்திரம் விட்டபோது அனுமன் அதற்கு கட்டுப்பட்டுக் கட்டுண்டு நின்றான். ஆனால் அரக்கர்களுக்கு சத்தியத்தில் நம்பிக்கை ஏது? பிரம்மாஸ்த்திரக்கட்டைநம்பாமல் நாட்டில் உள்ள கயிறுகளை யெல்லாம் கொண்டு வந்து அனுமனைக் கட்டினார்கள். முடிவு? கட்டும் போயிற்று, பிரம்மாஸ்த்திரமும் நழுவிற்று. ஆத்மாவினுடையவும் சரீரத்தினுடையவும் இரட்சகம் ஈஸ்வரனுடையது என்பதை மேலும் ஒரு உதாரணம் கொண்டு விளக்குவோம். ஒருத்திக்கு ஒருமகன். அவனுக்கு பைத்தியம் பிடித்துவிட்டது. அவனைப் பெற்ற தாய் என்ன செய்வாள்? அவனை வெளியே விட்டு வைத்து அவன் தனக்கும் பிறருக்கும் தீங்கு செய்து கொள்ள விட்டுவிடுவாளா? பித்தேறிய தன் அருமை மகனை ஒரு அறையில் அடைத்து வைத்து அவனுக்கு வேளா வேளைக்கு உணவும், இனிப்பு, கசப்பு மருந்துகளையும் அவனறியாவண்ணம் அவனுக்கு கொடுத்துவருகிறாள். (இராமடம் ஊட்டுவாரைப்போலே) இன்பதுன்பங்களாகிய மருந்துகளை உண்ட மகன் பித்தம் தெளிந்து 'அம்மா' என்று அழைப்பானாகில் "வாடா மகனே" என்று அணைத்துக் கொள்ள தாயாகிய பரம் பொருள் அவன் உள்ளத்தின் உள்ளேயே இருக்கிறது. சம்சார பித்து தெளிந்தவுடன் காட்சியளிப்பான். ஆகவே அறியாமையினாலே மக்கள் தமக்கு ஏற்படும் துன்பங்கள் நமது தாயாகிய பரம் பொருள் நம்மை ரட்சிப்பதற்காகக்கொடுத்தது என்று தெரிந்து கொள்ளாமல் அவதிப் படுகிறார்கள். தேகாத்ம விபாகம் தெரியாதவர்கள் தேகத்தையே அத்மா என்று பிரமிக்கும் அறிவிலிகள். அனுஷ்டான வேதாந்தியான நம் மகாத்மா கூறுவதைக் கவனிப்போம்: "In fact tribulations and death seem to me present a phase far richer than happiness or life. What is life worth without trials and tribulation which are the salt of life."

"There is a divine purpose behind every physical calamity"

"Death is as necessary for man's growth as life itself.

"Death is no fiend, he is the truest of friends. He delivers us from agony. He helps us against ourselves."

ஆகவே துன்பம் என்பது மரணத்தைவிட பெரியதாக இருக்க முடியாது. ஆகவே மரணமே வரவேற்க தகுந்ததானால் மற்ற துன்பங்களைப் பற்றி கேட்பானேன். ஒருவன் நமக்கு துன்பம் கொடுத்தால் அதை நாம் எவ்வாறு ஏற்கவேண்டும் என்பதை ஒரு வைணவ மதாச்சாரியார் கூறுவதை எடுத்துக்காட்டி இக்கட்டுரையை முடிக்கிறேன். "தனக்கு ஒரு கிலேசம் உண்டானால் கர்மபலன் என்றால் கிருபாபலம் என்றால் பிறக்கும் பிரீதியும்".

குற்றம் செய்தவர் பக்கல் பொறையும், கிருபையும், சிரிப்பும், உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்க வேண்டும். அதாவது (உதாரணத்திற்காக) ஒருவன் நம்மை ஒரு கன்னத்தில் அடித்தான் என்று வைத்துக் கொள்வோம். நாம் அதை எவ்வாறு ஏற்றுக் கொள்ள வேண்டும். நம்மை கன்னத்தில் அடித்த உடனே நாமும் கோபம் கொண்டு அவன் கன்னத்தில் அடியாமல் இருத்தல் அல்லது அவன் பலசாலியாய் இருந்தால் ",ஐயோ நம்மை அவன் அடித்து விட்டானே" அல்லது "ஐயோ நம்மால் ஒன்றும் செய்ய இயலவில்லையே" என்று வருந்துவது இவைகள் செய்யாமல் பொறுத்துக் கொள்வது. இது முதல்படி. அடுத்தபடியாக அவனிடத்தில் நமக்குத்தேவைப் படுவது கிருபை. "ஐயோ நாம் பொறுத்துக் கொண்டாலும் எம்பெருமான் அவனுக்கு உசித தண்டம் பண்ணுவானே என் செய்வோம்" என்கிற கிருபையும் வேண்டும். மூன்றாவதாக அவர்கள் குற்றத்திற்காக நாம்

ஸ்ரீ வரதராஜசுவாமி கோயில்—யாதமரி:
ஏ. குருமூர்த்தி, திருப்பதி. (ஆ.பி.)



சிரிக்க வேண்டும். அதாவது அவனை அவமானப்படுத்தும் சிரிப்பல்ல. அவன் செய்த குற்றத்தைச் சிரிப்போடு, மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்ள வேண்டும். இவன் நமக்கு பெரிய தீங்கு செய்வதாக நினைத்துக் கொண்டிருக்கிறுன். இவனுல் நமக்கு ஆத்ம விரோதமாக ஒன்றும் செய்ய முடியாது. தேகத்துக்கு ஏற்பட வேண்டியவற்றை இவன் மூலமாக ஆண்டவன் செய்திருக்கிறுன் என்று நினைக்க வேண்டும். "இடுக்கண் வருங்கால் நகுக" என்றுர் வள்ளுவரும். அதற்குமேல் அவர்கள் நமக்கு கொடுத்தத் துன்பத்திற்காக நாம் உகக்க வேண்டும். "ஐயோ நாம் நமக்கு விரோதியாகிய உடம்பை தூக்கிக் கொண்டு திரிகிறேமே. இது என்ன அநியாயம். உடம்பைக் கண்டால் விரோதியைக் கண்டால்போலே யும் என்று பெரியோர்கள் கூறியபடி உடம்பு கொடிய விரோதியாயிற்றே. அந்த விரோதியாகிய நம் உடம்பை அதன்மேல் நமக்குள்ள அபிமானத்தால் நாம் ஒறுக்க முடியாமல் இருக்கிறேம். அப்படிப்பட்ட விரோதியை நமது அன்பர் நன்ருக தண்டித்தாரே. அவரன்றே நமது உற்ற நண்பர். அவர் வாழ்க!" என்று உகக்க வேண்டும். யாவற்றிற்கும் மேலாக நம்மை அடித்தவர்கள் பக்கல் உபகார ஸ்ம்ருதிவேண்டும். நம்மைத்தண்டித்த அன்பர்கள் நமக்கு ஏதோ பெரிய தீங்கு செய்துவிட்டதாக அன்றே சந்தோஷப்படுகிறுர்கள். நாம் சுமக்க முடியாமல் சுமந்து கொண்டிருந்த பாவ மூட்டையை நம்மேல் உள்ள கிருபையால் தாங்கள் வாங்கிக் கொண்டார்களே,ஆண்டவனேஎனக்கு பெரிய உபகாரகர்களான அவர்களை மன்னித்து அவர்களுக்கு அன்பு காட்டுங்கள் என்று வேண்டுவதுடன் அவர்களிடத்தில் நமக்கு நன்றியறிதலும் வேண்டும். "என் நன்றிகொன்றுர்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை செய் நன்றி கொன்ற மகற்கு". ஆக இந்த கண் கொண்டு நமக்கு வரும் துன்பத்தை நோக்கினுல் அது நமக்கு துன்பமாகவா இருக்கும். பாமர மக்கள் துன்பம் என்று சொல்வது நம் நோக்கில் அது தன் நச்சுத் தன்மையை இழந்துவிடுகிறது. இதுதான் விதியை மதியால் வெல்வது என்பது. ★

# தி. தி. தேவஸ்தான தமிழ் சமய வெளியீடுகள்

| | ரூ. | பை |
|---|---|---|
| அஷ்டோத்ர சகஸ்ரநாம அர்ச்சனை ... | 1 | 00 |
| பாலசரிதம் (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) ... | 0 | 75 |
| பால பாகவதம் (செவ்வைச் சூடுவார்) முதல் பாகம் ... | 4 | 00 |
| ,, ,, இரண்டாம் பாகம் ... | 4 | 00 |
| தசரூபகம் (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) ... | 3 | 50 |
| குருபரம்பரை (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) ... | 3 | 00 |
| திருமலை வழிகாட்டி ... | 0 | 25 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மகாத்மியம் (தலபுராணம்) ... | 2 | 00 |
| ஸித்தாந்த த்ரய சங்க்ரஹம் (திரு. ஓ. வி. கபிஸ்தலம் தேசிகாச்சார்யா) ... | 2 | 50 |
| ஸ்ரீராமஜெயத் திருப்புகழ் பகுதி I, பகுதி II. (Each) (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) ... | 3 | 00 |
| சர்வ தேவதா பூஜா விதானம் — தி. தி. தே — ... | 0 | 70 |
| ஸுப்ரபாதம் (பொருளுடன்) ,, ... | 0 | 50 |
| ஸுப்ரபாதம் ,, ... | 0 | 12 |
| செம்பொருள் (எஸ். கிருஷ்ணவேணி அம்மையார்) ... | 1 | 50 |
| ஸ்ரீநிவாச கல்யாணம் (வண்ணப்படங்களுடன்) ... | 11 | 50 |
| திருக்குறள் (பொருட்பால்) திரு.டி.பி. பழனியப்பபிள்ளை ... | 7 | 50 |
| ,, (காமத்துப்பால்) (தொகுத்தவர்) ... | 4 | 00 |
| திருவாய்மொழி (விளக்கவுரையுடன்) பாகம் 1 ... | 7 | 50 |
| (திரு. டி. பி. பழனியப்ப பிள்ளை) பாகம் 2 ... | 10 | 50 |
| யாப்பொளி (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) ... | 3 | 50 |
| ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி ஸுப்ரபாதம் (திரு. எம். வி. ராமநாத கனபாடிகள் ... | 0 | 20 |
| நித்யாநுஸந்தானம் — தி. தி. தே — ... | 3 | 75 |
| ஏழுமலை யாத்திரை (திரு. டி. கே. நாராயணன்) ... | 4 | 00 |
| சித்திர ஸுப்ரபாதம் (வண்ணப்படங்களுடன்) தி.தி.தே - ... | 8 | 00 |

## தி. தி. தேவஸ்தான வெளியீடுகளுக்கான விற்பனை சலுகை விவரங்கள்

தி. தி. தேவஸ்தான கல்வெட்டு அறிக்கைகள், தி. தி. தேவஸ்தான கல்வெட்டுத் தொகுதி 1 மற்றும் தொகுதி 5 ஆக மூன்று நூல்களுக்கு, செட்டாக வாங்குவோர்க்கு, 12½% தள்ளுபடி வழங்கப்படும்.

'ஸ்ரீ அன்னமாச்சார்யா சங்கீர்த்தனமுலு' மற்றும் 'தாள்ளபாக்கா பணிகள்' ஆகிய 6 தொகுதிகளை (தெலுங்கு) ஒருமித்து வாங்கினுல் 12½% தள்ளுபடி வழங்கப்படும்.

ரூ. 100 அல்லது அதற்கு மேற்பட்டு விளங்கும் விற்பனைக்கு 12½%, ரூ. 500/- லிருந்து ரூ. 1000/- வரை விளங்கும் விற்பனைக்கு 20%, ரூ. 1000/-க்கு மேல் இருக்கும் விற்பனைக்கு 30% என்றவாறு கமிஷன் வழங்கப்படும். ரூ. 100/-க்கு மேற்பட்டு சரக்காணைகள் விளங்கினுல், அவற்றிற்கான தபால் செலவினை தி. தி. தேஸ்வதானம் ஏற்கும்.

# நாமக்கல் திருத்தல மகிமை

ஸ்ரீ நரசிம்மசுவாமி இரணியனை சம்ஹாரம் செய்துவிட்டு அந்தக் கோபத்துடன் (உக்ரத்துடன்) இருந்தார். அந்த சமயம் ஸ்ரீ மஹாலக்ஷ்மி சுவாமி அருகில் சென்று "சுவாமி சாந்தமடைக" என்று வேண்டிக் கொண்டாள். ஆனால் சுவாமியின் கோபம் தணியவில்லை. அது சமயம் பக்தன் பிரகலாதன் 'நாராயணா' என்று அழைத்தவண்ணம் ஓடி வந்தான். உடனே இறைவன் "குழந்தாய் என்னருகே வா" என்று ஆசையோடு அழைத்து தன் மடியில் அமரச்செய்து அவனுடன் கொஞ்சிக் குழாவினார். சுவாமியின் கோபமும் தணிந்தது.

இதனைக் கண்ட லக்ஷ்மி "நான் அருகில் வந்த சமயம் தங்களுடைய கோபம் தணியவில்லை. அந்தச் சிறுவன்வந்ததும் அருகே வா என்று அழைத்து அவனோடு கொஞ்சி விளையாடுகின்றீர்கள். இது எனக்கு பெருத்த அவமானம்" என்று கூறிவிட்டு கோபித்துக் கொண்டு பூலோகத்திற்கு வந்து, நாக வனத்தில் ஓர் நீர் நிலையை ஏற்படுத்தி அங்கு பத்மாசனம் கொண்டு ஸ்ரீ பகவானை பூஜித்து தவம் செய்துவந்தாள்.

"சாளக்கிராமம்" என்பது கடல், நதிகளில் கிடைக்கக் கூடிய கருமை நிறம்கொண்ட சிறிய உருண்டையான கல் ஆகும். இதனைக் 'கல்' என்று சொல்லக்கூடாது. ஏன் எனில் ஒவ்வொரு சாளக்கிராமமும் ஒவ்வொரு தெய்வம் என்று கருதி நம் பெரியோர்கள் பூஜித்து வணங்கிவந்தனர். இப்பொழுதும் வணங்கி வருகிறார்கள். இதில் ஏதேனும் ஒரு புறம் சிறு துவாரம் ஒன்று காணப்படும்.

ஸ்ரீ நரசிம்மசுவாமி லக்ஷ்மியின் கோபம் தணிவதற்காக பூலோகத்திற்கு வந்து ஒரு சாளக்கிராமத்தினுள் (மறுபுறத்தினுள்) ஆவிர்ப்பவித்தார். இச்சமயம் ஸ்ரீ ஆஞ்சநேயமூர்த்தி சஞ்சீவி மலையை அதன் இருப்பிடத்திலே வைத்து விட்டு வருகையில் "கண்டகி" நதியில் நீராடினார். அது சமயம் இவர்க்கு இந்தச் சாளக்கிராமம் தென்படவே "ஆகா! இது மிக விஷேசமானது. இரு புறமும் இரு மூர்த்திகள் ஒரே சாளக்கிராமத்தில் இருப்பது மிக அதிசயம்" என்று அதனை தான் பூஜை செய்ய எடுத்துவந்தார். அவ்வாறு வருகையில் இந்த நாகவனத்தில் லக்ஷ்மி தவம் செய்வதைக் கண்டு "தாயே, இச்சாளக்கிராமத்தைக் கீழே வைக்கக் கூடாது. மிகவும் விசேஷமானது. எனவே தாங்கள் இதனைச் சிறிது நேரம் வைத்திருங்கள். நான் என்னுடைய அனுஷ்டானங்களையும் ஸ்ரீராம ஜபத்தையும் செய்து முடித்துவிட்டு பெற்றுக் கொள்கிறேன். தயவு செய்து என்னுடைய வேண்டுகோளைப் பூர்த்தி செய்ய வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்.

ஸ்ரீ லக்ஷ்மி ஸ்ரீ ஆஞ்சநேயரின் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டார். ஸ்ரீஆஞ்சநேயர் தன்னுடையஅனுஷ்டானங்களை முடித்துவிட்டு ஸ்ரீராம ஜபம் செய்ய ஆரம்பித்தார். இவருக்கு ராம ஜபம் செய்தால் காலம் செல்வதே தெரியாது. அவருடைய தியானம் களைய இரண்டு மூன்று தினங்கள் ஆகிவிட்டன. அதற்குள், இங்கே ஸ்ரீ லக்ஷ்மி கையில் இருந்த சாளக்கிராமத்தின் கனம் காலம் செல்லச் செல்ல அதிகரித்தது. தன்னால் இயன்றவரை கீழே வைக்காமல் காத்து வந்தார். தன்னுடைய சக்திக்கு மீறவே இனி நம்மால் சாத்தியமாகாது என்று கீழே வைத்து விட்டார். அது உடனே பெரிய மலையாய் உருவெடுக்க ஆரம்பித்தது. (இம்மலை ஒரேக் கல்லால் ஆனது. மிகப் பெரியது. இதன் பெயர் சாளக்கிராம பர்வதம்) இந்தச் சமயத்தில் ஸ்ரீ ஆஞ்சநேயர் தன்ஜபம் முடித்து விட்டு கண் விழித்துப் பார்க்கவே மிக ஆச்சரியத்துடன், 'தாயே! இது என்ன இங்கே பெரிய மலை ஒன்று கம்பீரமாகக் காட்சியளிக்கிறது' என்று வினவினார். அதற்கு லக்ஷ்மி "ஆஞ்சநேயரே, நீர் கொடுத்த சாளக்கிராமத்தின் கனம் தாங்க முடியாமல் கீழேவைத்துவிட்டேன். அது தான் இவ்வாறு வளர்ந்துவிட்டது". "அப்படியா, நான் சஞ்சீவி மலையையே தூக்கியவன். இது எம்மாத்திரம்" என்று கூறி, விஸ்வரூபம் கொண்டு மலையைப் பெயர்க்க முற்பட்டார். ஆனால் அவரால் அம்மலையை அசைக்கக்கூட முடியவில்லை. அப்பொழுது "ஆஞ்சநேயா! நீ கலங்காதே. நான் லக்ஷ்மியின் கோபம் தணியவே இப்படிச் செய்தேன். நான் இங்கேயே இருக்க திருவுளம் கொண்டுள்ளேன். ஸ்ரீராமர் இருப்பிடம் சென்று நீ ஸ்ரீ ராம கைங்கர்யத்தை முடித்து விட்டு இராமாவதாரத்திற்குப் பின் இங்கு வந்துஅதே விஸ்வரூபத்துடன் காட்சியளிப்பாயாக" என்றுஅசரீரிஒன்றுகூறியது. அதன்படி ஸ்ரீ ஆஞ்சநேயர் ஸ்ரீநரசிம்மமூர்த்தியைத் தரிசித்த பின், இம்மலையைவலம்வருகையில் மறுபுறம் மற்றொரு மூர்த்தியான ஸ்ரீ அரங்கநாதர் கார்கோடக சைனத்தில் காட்சியளித்தார். அவரையும் தரிசித்த பின் ஸ்ரீ ராம கைங்கர்யத்தை முடித்து விட்டு அசரீரியின்படி இங்கு வந்து ஸ்ரீநரசிம்ம மூர்த்தியை வணங்கியவண்ணம் விஸ்வரூபத்துடன் காட்சியளித்தார். அப்போது ஸ்ரீ நரசிம்மசுவாமி, "லக்ஷ்மி தேவி! உன் தவத்திற்கும் பக்திக்கும் மகிழ்ந்தேன். நீ இங்கேயே எந்தத் திருக்கோலத்தில் தவம் செய்தாயோ அதே பத்மாசனத் திருக்கோலத்தில் என்னைப் பார்த்தவண்ணம் கிழக்கு நோக்கி, நீ 'ஸ்ரீ நாமகிரி லக்ஷ்மி' என்ற திருநாமத்துடன் விளங்க வேண்டும். இவ்விடம் வரும் பக்தர்கள் முதலில் உன்னையும் பிறகு என்னையும் தரிசனம் செய்வார்கள். மேலும், இந்த மலையில் நான் வாசம் செய்வதாலும், நீ இங்கு தவம் செய்ததாலும் "நாமக்கல்" என்ற பெயரோடு இந்த நாகவனம் சிறந்து விளங்கும்" என்று கூறி அருளினார். அந்நாமக்கல் நாளடைவில் "நாமக்கல்" என்று மாறியது என்று பெரியோர் கூறுகின்றனர். ★

திரு. ஆர். விஜய நரசிம்மன்,
நாமக்கல்.

தொடர் கட்டுரை

# கீதை காட்டும் நல்வழி




அத்தியாயம்–10

விபூதி யோகம்

பகுதி –3

இறைவனுடைய நாமத்திற்கு அபரிமிதமான சக்தி உண்டு. அதனால்தான் 'நற்றவா உனை நான் மறப்பினும் சொல்லு நா நமச்சிவாயவே' என்றார் ஒரு பக்தர். மற்றொருவரோ,

''குலந்தருஞ் செல்வந் தந்திடு மடியார்
படுதுயராயின வெல்லாம்,
நிலந்தரஞ் செய்யும், நீள் விசும்
பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்,
வலந்தரும் மற்றுந் தந்திடும்பெற்ற
தாயினும் ஆயின செய்யும்
நலந்தருஞ் சொல்லை நான் கண்டு
கொண்டேன்
நாராய ணுவென்னும் நாமம் ''

ன்று இறைவனது திருநாமம் நமக்கு ரதையெல்லாம் தரவல்லது என்பதை ஒரு பட்டியலே போட்டுக் காண்பித்து விட்டார்.

மகாத்மா காந்திஜி ஒரு முறை தமது நண்பர் ஒருவரிடம், ''ஒவ்வொரு தடவையும் கடவுளின் திருநாமத்தை உச்சரிக்கையில் கடவுளை நீங்கள் மென் மேலும் நெருங்குகின்றீர்கள். இது ஒரு நிருபிக்கப்பட்ட உண்மை. நான் வெற்றுரையாக இதை இப்பொழுது சொல்லவில்லை. வாழ்க்கையில் நிமிடம் தோறும் இதை அனுபவிப்பவன் என்ற விதத்தில் என் சொந்த அனுபவத்திலிருந்து இதைக் கூறுகிறேன்'' என்று பகவன் நாமத்தின் மகிமையைப் பற்றி எடுத்துரைத்தார்.

இந்த நிலை யாருக்குக் கிட்டும்?

''எனக்கு எல்லாம் இறைவனே. இறைவனன்றிப் பிறிதோர் புகலிடம் எனக்குக் கிடையாது'' என்ற தீவிர நம்பிக்கை உடையவர்கள் தான் இத்தகைய உயரிய நிலையை அடைய முடியும்.

இத்தகைய சிறந்த பக்தர்களுக்குப் பகவான் தரும் பரிசு யாது? அடுத்த சுலோகத்தில் பகவானே அதற்கான பதிலைத் தருகிறார்:

தேஷாம் ஸததயுக்தானாம்
பஜதாம் ப்ரீதி பூர்வகம்|
ததாமி புத்தியோகம் தம்
யேன மாமுபயாந்தி தே ||10||

---

திரு. டி. கே. நாராயணன், M.Sc.,
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.

---

''என்றும் யோக முயற்சியோடு அன்புடன் என்னை வழுத்துபவர்களுக்கு நான் புத்தியோகத்தை வழங்குகிறேன். அதன் மூலம் அவர்கள் என்னை அடைகின்றார்கள்''

இறைவனது பெருமையை உணருவதற்கும் நமக்கு இறைவன் ...

பின்னர் அதே உணர்வில் எப்பொழுதும் ஊறியிருந்து இறைவனிடத்தில் இடையருத பக்தி செலுத்துவதற்கும் அவனருள் நமக்குத் தேவை. ஆக எந்த நிலையிலும் இறைவருளே நமக்கு உற்ற துணை.

ஒரு செயலில் வெற்றிக்கு அடிப் படைத் தேவை இரண்டு: ஒன்று நமது முயற்சி. மற்றது இறையருள். நாம் இறைவனை நோக்கி ஒரு அடி எடுத்து வைத்தால் கருணுமூர்த்தியான இறைவன் நம்மை நோக்கிப் பத்தடி எடுத்து வைக்கிருர். யோகத்தில் நாட்டம் கொண்டு முயற்சியுடன் இறைவனிடம் அன்பு செலுத்துபவர்களுக்கு பகவான் புத்தியோகத்தைத் தந்தருள்வதாகக் கூறுகிருர்.

புத்தியோகம் என்ருல் என்ன?

சீனி இனிக்கும் எனக் கேட்டிருக்கிரும். கொஞ்சம் சீனியை எடுத்து நாவில் வைத்தால் அது இனிக்கும் ஒரு பொருள் என்பது உறுதியாகிறது. பின்னர் இனிக்கும் சர்க்கரையைக் கொண்டு என்னென்ன வகைத் திண் பண்டங்களைச் செய்யலாம் என்று அறிவது சர்க்கரையைப் பற்றிய புத்தி யோகமாகிறது.

அண்டம் எங்கும் நிறைந்துள்ள சக்தி அணுவிலும் இருக்கிறது என்ரு விஞ்ஞானி முதலில் அறிகிருர். பின்னர் சோதனைகளினுல் அணுவைப் பிளக்கும் போதும், சேர்க்கும் போதும் அபரிமிதமான சக்தி வெளிப்படுகிறது என்பதைக் கண்டு பிடிக்கிருர். அதன் பின்னர் இந்த அணுச் சக்தியை எந்தெந்த வகைகளில் பயன்படுத்தலாம் என்று அறிவது அணுவைப்பற்றிய புத்தியோகமாகிறது.

அது போலவே இறைவன் ஆற்றல், அருள் மற்றும் அன்பு வடிவானவன் என்று மறைமொழி மற்றும் சான்ருேர் வாக்கின்முலம் ஒருவன் தெரிந்து கொள்கிருன். பிறகு ஜபம், தியானம் போன்ற பயிற்சிகளின் மூலம் தானே இறைவனது மகிமையை உணர்ந்து பார்க்கிருன். அதுயோகமாகிறது. அதன் பின்னர் அந்த யோகத்தில் மென்மேலும் தீவிரமாக ஈடுபட்டால் பெறற்கரிய பெருநிலையை அடையலாம் என்பதைக் கண்டு கொள்கிருன். அது புத்தியோகமாகிறது.

'புத்தியோகம்' என்பதை ஆங்கில கத்தில், 'The yoga of understanding' என்று கூறலாம். இதில், 'understanding' என்ற பதம் தனிப்பொருளை உடையதாம். இதை இரண்டு பதங்களாகப் பிரித்தால் under, Standing என்ருகிறது. மாற்றி வாசித்தால் 'Standing under' என்ருகும். 'கீழே நிற்றல்' என்பது இதன் பொருள்.

எதன் கீழ் நிற்றல்? குடையின் கீழ் நாம் நின்ருல் வெயில் மற்றும் மழையால் நாம் தாக்கப்படாது நம்மைக் காத்துக்கொள்ளலாம்.

அதுபோல 'ஆண்டவனது அருள்' என்ற குடையின் கீழ் நாம் எப்பொழுதும் நிற்கக் கற்றுக் கொள்வோமேயாகில், சீத உஷ்ணம், வெற்றி தோல்வி, இன்ப துன்பம் ஆகிய எதிரிடை இரட்டைகளால் தாக்கப்படாது நாம் நம்மைக் காத்துக்கொள்ளலாம். அந்த நிலையில் மனத்தில் எப்பொழுதும் அமைதியும் ஆனந்தமும் குடி கொண்டிருக்கும்.

இது மட்டுமல்ல. பக்தன் புத்தியோகத்தால் மேலும் நம்மை அடைகிருன்.

தேஷா மே வானுகம்பார்த்த
மஹமக்ஞானஜம் தமঃ|
நாசயாம் யாத்ம பாவஸ்தோ
ஞான தீபேன பாஸ்வதா ||1-11||

''நான் அவர்கள் மீது அருள் கூர்ந்து, அந்தக் கரணத்தில் வீற்றிருந்து, மெய்ஞானச் சுடர் விளக்கால் அக்ஞானத்தால் உதித்த காரிருளை அகற்ற அருள்கிறேன்''

இறைவன் படைத்த உயிர்கள் அனைத்தும் அவனுடைய அருளுக்குப் பாத்திரமாகத் தகுதி வாய்ந்தவைகளேயாகும். தான் பெற்றெடுத்த குழந்தைகளின் நிறம், குணம் போன்றவை மாறுபடினும் தாய் ஒருத்தி அவற்றிடத்து ஒரே மாதிரியான அன்பைக் காட்டுவது போல், இறைவனது குழந்தைகளாகிய நாம் எப்படி இருப்பினும் அதைக் கொஞ்சமும் பொருட்படுத்தாது இறைவன் நம்மீது கருணையைப் பொழியத் தயாராயிருக்கின்ருர்.

இறைவன் திட்டவட்டமாக உறையும் இடம் எது?

'' மத் பக்தாঃ யத்ர காயந்தே
தத்ர திஷ்டாமி நாரத ''

என்கிருர் பகவான்.

முழு அலங்காரங்களுடன் உற்சவ மூர்த்திகள்-ஸர்வேஸ்வரர் கோயில்-நாக்பூர்.
திருமதி. சுசீலா ராஜகோபாலன்-நாக்பூர்.



'எனது பக்தர்கள் எங்கே பக்தியுடன் என்னைக் கூவி அழைக்கின்றார்களோ அங்கே நான் நிற்கிறேன், நாரதா' என்று பகவான் கூறுவதிலிருந்து, 'பக்தர்களின் உள்ளமே பகவானின் இருப்பிடம்' என்பது தெளிவாகிறது. இரவோ பகலோ எந்த வேளையிலும் குழந்தையைப் பாதுகாக்கத் தாய் ஒருத்தி தயாராயிருப்பதுபோல், பக்தர்கள்மீது அருள் கூர்ந்து பகவான் யாண்டும் அவர்களைக் காத்தருளத் தயாராயிருக்கிறார்.

அன்பர்களின் உள்ளத்தில் நீங்காது பகவான் குடியிருக்கிறார். இதைத்தான் 'நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்' என்பர் பெரியோர். அந்தக் கரணத்தில் வீற்றிருந்து அன்பர்களின் உள்ளத்தில் பகவான் ஞான தீபத்தை ஏற்றி வைக்கிறார். ஞான தீபம் ஏற்றப்பட்ட மாத்திரத்திலேயே அது வரை உள்ளத்தைக் கவ்வியிருந்த அஞ்ஞான இருள் நில்லாது நீங்குகிறது.

பகவான் பக்தர்களின் உள்ளத்தில் ஏற்றி வைக்கும் ஞானதீபத்தின் தத்துவங்கள் கீழ் வருமாறு: விவேகம் அல்லது பகுத்தறிவு (மெய்யறிவு) அந்த தீபத்தின் உருவமாகும். உயரிய பக்தியின் விளைவாக மனத்தில் எழும் திருப்தியே அதற்கு எண்ணெயாகிறது. விளக்கு எரிவதற்குத் தூயகாற்று வேண்டுமல்லவா! ஆழ்ந்த ஈசுவரத் தியானமே தூயகாற்று ஆகிறது. நேரிய பிரம்மசரிய விரதத்தால் கிடைக்கும் ஆன்ம சக்தியே இந்த விளக்கின் திரியாகிறது. விருப்பு வெறுப்பற்ற தெளிந்த மனமே அந்த விளக்கு எரியும் வீடாகும். எந்தவிதத் தடங்கலும் இல்லாது ஒரு முகத்துடன் கூடிய தியானத்தின் விளைவாகக் கிடைக்கப் பெறும் நிறை காட்சியே இந்த ஞானதீபத்தின் ஒளிப்பிழம்பாகும். பகவான் பக்தனின் உள்ளத்தில் ஏற்றி வைக்கும் ஞானதீபத்தின் தன்மைகள் இவையேயாகும். இத்தகைய

(25-ம் பக்கம் பார்க்க)

# வேங்கடவன் அடைக்கலப் பத்து

வித்துவான். க. ஆ. மார்க்க பந்து, காஞ்சிபுரம்.

தேனார் பொழில்சூழ் வேங்கடத்துத் தேவே யெந்தன ருந்துணையே!
மானேர்விழியா ளலர்மேலு மங்கை விழையும் மணவாளா!
ஊனேர்பிறவிக் கடல்வீழ்ந்துணர் வற்றிருக் குமடியேனை
ஏனோ காவா திருந்தனை நீ? யேழையுந் தனடைக்கலமே.

மணியா ரரவின் மேல்துயிலும் வள்ளா லுந்தன் பாதமலர்
பணியா தொழிந்தே னென்றேநீ பாரா முகமா யிருந்தனையோ?
பிணியார் பிறவிக் கடலுழலும் பேதையேற்கு மறையோர்க்கும்
அணியாய்! எந்தனரும் பொருளே! அடியேனுந் தனடைக்கலமே.

ஞானப் பிழம்பே மலையாக நாளும் வைகும்நிலை கண்டும்,
ஊனப் பிறப்பை யறுத்துய்யும் வகையா னென்று மறியேனே
கானந்திரிந்து கறவைகளைக் காத்தாயன்று கோவிந்தா!
வானந்தவழும் மலைக்கோவே! வந்தேனுந்தனடைக்கலமே.

அலையார் புனலில் கராம் வாயிலகப்பட்டுழந்த களிறதனை
உலையாதன்று காத்தருளி யுவந்தாயென் பரடியேனும்
நிலையாய்ப் பிறவிக் கடலாழ்ந்து நினைவற்றிருத்தலழகாமோ?
மலையார் சுனைசூழ் வேங்கடத்துமாலே! யுந்தனடைக்கலமே.

மையார் பொழில்சூழ் வேங்கட மாமலையாய்! உந்தன் திருவடிக்கே
கையார்மலர் கொண்டருச்சித்துக் கடையேனியற்றும் பூசனைகள்
பொய்யே யெனினு மடியேன் தன்புன்மை தீர்த்தருளாயோ?
ஐயா! யெந்தனுருயிரே! அடியேனுந்தனடைக்கலமே.

எளியேனுந்தனெழிலடிகள் எண்ணித்துதியேனென்றாலும்
அளியே னென்னை யாதரித் தருளலுந்தன் கடனேகாண்
களியார் வண்டின் இசைகேட்கும் கமலப்பொய்கை மணநாளும்
அளியார் வேங்கடத்தையாவோ! அடியேனுந்தனடைக்கலமே.

ஏழுமலைவாழ் கோவிந்தா! யென்றே தினமுந் தொழுமடியார்
வாழும் வகைநீ யளித்தியென வழங்குமுண்மை நிலைகண்டே
தாழுமடி யேனுய்ந்திடுதல் தவறாதென்றே யுனையடைந்தேன்
ஆழும் கயங்கள்சூழ் மலையெம் அத்தா! வுந்தனடைக்கலமே.

எட்டட் சரங்கள் கொண்டுன்னையேத்தி வழுத்து மடியார்கள்
முட்டிச்சென்றுன் திருவடியைக்காண முயலுநிலை கண்டும்
பட்டிச் சிறியேன் பலகாலும் பணியாதொழிந்தேன் பரந்தாமா!
எட்டிச் செலநீ யெண்ணுதியோ யேழையுந்தனடைக்கலமே.

பிழைகள் பலவும் புரிந்துன்னைப் போற்றா தொழிந்தேனின்றுன்னை
விழையுந் தன்மை கண்டுங்கை விடுதலுனக்கே யழகாமோ?
மழையும் நாணும் வடிவழகா! மாலே! யெந்தன் மாமணியே!
கழையார் வரைசூழ் வேங்கடவா! கடையேனுந் தனடைக்கலமே.

அடியார் தம்மையாட் கொண்டருளுந் தன்மையுடையோனே!
மிடியார் வாழ்வும் வினைப்பகையும் வீடியானுங் கடைத்தேறும்
படியார் அருள வல்லார்கள்பரனே! யெந்தன் பழம்பொருளே!
கடியார் சோலை வேங்கடவா! கடையேனுந்தனடைக்கலமே.





### திருமலை செல்லும் யாத்திரிகர் கவனிக்க:

# திருமலையிலும் திருப்பதியிலும் தங்கும் வசதிகள்

அநேகத் தர்ம சத்திரங்களை (தர்மசாலை)த் திருப்பதியிலும் திருமலையிலும். திருமலை-திருப்பதி தேவஸ்தானம் கட்டியிருக்கிறது.

திருமலையில் நூற்றுக் கணக்கான அழகிய குடில்கள் (காட்டேஜ்) மிகக் குறைந்த வாடகையில் கிடைக்கின்றன. பாதிப் பகுதிக் குடில்களுக்கு வாடகை ரூ. 5/- முதல் ரூ. 9/- வரையில்; முழுக் குடில்வாடகை ரூ. 10/- முதல் ரூ. 16/- வரையில. ஐந்து உறுபபினர்கள் கொண்ட ஒரு குடும்பம் பாதிப் பகுதிக குடில்களிலும், 12 பேர் கொண்ட குடும்பம் முழுக் குடிலிலும் வசதியாகத் தங்கலாம்.

இத்தனை வசதிகளுடன் 10,000 முதல் 15,000 யாத்திரிகர் வரையில் திருமலையில் தங்கமுடியும். ஆனால் அநேக சமயங்களில் கோயிலைத் தரிசிக்க வரும் பக்தர்களின் எண்ணிக்கை 25,000யும் தாண்டி விடுகிறது. கடைசி நிமிஷத்தில் இடம் கிடைக்காமல் திண்டாடுவதைத் தவிர்க்க, முன் கூட்டியே குடில்களுக்கு ரிஸர்வ் செய்து கொண்டுவிடுமாறு யாத்திரிகரை வேண்டுகிறோம். வரவேற்பு அதிகாரி, திருமலை-திருப்பதி தேவஸ்தானம், திருமலை (போன்: 2571) என்ற விலாசத்துக்கு ஒரு வாரம் முன்பே எழுதி ரிஸர்வ் செய்து கொள்ளவேண்டும். தங்கும் வசதி கோரி எழுதும் எல்லா விண்ணப்பங்களுடனும் ரூ. 20/-க்கு டிமாண்ட் டிராப்டோ, மணியார்டரோ சேர்த்து அனுப்ப வேண்டும். கிடைக்கக் கூடிய தங்குமிடங்களை ரிஸர்வ் செய்து தரப்படும்; அதிகப்படி கட்டணம் திருப்பித் தரப்படும்.

டிமாண்ட் டிராப்டோ, மணியார்டரோ திருமலைக்குக் கிடைத்தவுடன், விண்ணப்பித்தவர்களுக்கு ரிஸர்வேஷன்கார்டு ஒன்று அனுப்பப்படும. தங்குமிடங்களைப் பெற அந்த ரிஸர்வேஷன் கார்டையோ, மணியார்டர் அல்லது டிமாண்ட் டிராப்ட் ரசீதுகளையோ திருமலை விசாரணைக் காரியாலயத்தில் காட்ட வேண்டும்.

பொதுவாக ரிஸர்வேஷன் ஒரு நாளைக்கு மட்டுமே வழங்கப்படும். மேலும் நீடிக்க வேண்டுமானால் தங்குமிடங்கள் கிடைப்பதை அனுசரித்தே கொடுக்கப்படும்; உறுதி கூறமுடியாது.

யாத்திரிகர் தங்கள் உடைமைகளை ஜாக்கிரதையாக வைத்துச் செல்லத் திருமலையிலும் திருப்பதியிலும் தேவஸ்தான 'காப்பு அறை' வசதிகள் உள்ளன. யாத்திரிகர் சமையல் செய்ய விரும்பினால் தேவையான பாத்திரங்களைத் தேவஸ்தானத்திலிருந்து குறைந்த டிபாஸிட் கட்டிப் பெறலாம். யாத்திரிகர் ரூ. 30/- டிபாசிட் கட்டினால் காட்ரெஜ் பூட்டுகள் கொடுக்கபபடும்.

திருப்தியான தாவர உணவு வகைகளை நியாய விலையில் அளிக்கும் பலஉணவு விடுதிகளைத் திருமலை-திருப்பதி தேவஸ்தானம் திருமலையில் நடத்துகிறது.

நிர்வாக அதிகாரி,
திருமலை-திருப்பதி தேவஸ்தானம்
திருப்பதி.

# எண் கணித சோதிடமும்....

# ....அதன் பலா பலன்களும்

பகுதி — 7

## எண் நான்கின் தன்மைகளும் கொள்கைகளும்:

எண் நான்கினைத் தனதாகக் கொண்டவர்கள் தங்களது கருத்துக்களின் பூரணத்தில் மற்றவர்களை ஒருமித்து நோக்கும் பார்வையும் கோணமும் அலாதியாகக் காணப்படும். அதாவது இவர்கள் துக்ளக்கைப்போல் புதுப் புது சட்டங்களையும், கொள்கைகளையும் ஏற்படுத்தி, அதைத் தனக்கே உரிய பாணியில் வீட்டிற்கோ, நாட்டிற்கோ விஷயார்த்தமாகத் தொந்தரை செய்யும் முறையில் பரப்ப முயற்சிப்பார்கள். ஆதலால் எதிர்ப்புக்கள் என்ற முறையில் நேரடி எதிரிகளைச் சமாளிக்க முற்பட்டபோதிலும், இவர்களுக்குக் கூடஇருந்தே குழி பறிக்கும் இரகசிய எதிரிகள் அதிகம். அவர்கள் இடைவிடாமல் சகுனியைப் போல் இவர்களை ஒழிப்பதற்காகவே சதித்திட்டம் தீட்டிக் கொண்டிருப்பார்கள். ஆதலால் இவர்களுக்கு ஆத்மார்த்தமான நண்பர்கள் அறவே இருக்க முடியாது. க்ஷண நேரத்தில் இவர்கள் திட்டம் புதிய பாணியில் உருவாகிவிடும். அதை விளக்குவதற்கு இவர்களுக்கென்று 'ஒருவித கொள்கைச் சவால்' பிறந்துவிடும். புரட்சியை, புதிய பாணியை ஒருவித கலகச் சீர்திருத்தத்தையுமே தேடியும் நாடியும் அலையும் இவர்களது சலனப் பயணத்திற்கு, நாட்டின் பொதுவான சட்டங்களும், வழக்கங்களும், சட்டக் கோட்பாடுகளும், முட்டுக்கட்டையாக நிற்பதால் ஊர் உலகிற்கு இவர்களது சிந்தனைகளும், இவர்களும் வளைந்து கொடுக்காமல், மறுக்க நேரிடும். அதாவது சம்பிரதாயம் சடங்கு என்று ஒன்று உலக வழக்கில் ஒருமித்து காணுமாயின், அதை மீறும் உள்ளத்திரிபும், புதிய சட்டங்களை இயற்றும் வேலையும் இவர்களுக்கு என்று ஒதுக்கப்பட்ட முறைகேடுகள். சமூக கலாசார மத, இன அடிப்படையின்பேரில் ஆதாரமாக தொன்று தொட்டு வழங்கிவரும் சீர்திருத்தங்களுக்கும் திருத்தம் காணத்துடிப்பவர்களாக இருப்பார்கள். எனவே இவர்களை 'Optimistic' கோணத்திலும் 'Pessimistic' கோணத்திலும் நோக்குதல் கடினம். அதாவது சொல்லுக்கும் செயலுக்கும் ஒத்துவராதவர்களைப்பற்றி நமக்குள் எழும் உணர்ச்சிகளை, நடைமுறையில் நாம் இப்பரந்த உலகில் சிலரைக் காணவில்லையா? இரகசிய எதிரிகளைத் தன்பால் கொண்ட மூன்றும் எண் கொண்டவர்களுக்கும் இவர்களுக்கு என்று உள்ள எதிரிகளுக்கும் உள்ள அடிப்படை வித்யாசம் யாதெனில், 3-ம் எண்ணின் எதிரிகளுக்குப்பொதுவாக சட்டம், ஒழுங்கு, நேர்மையைப்பற்றி பேசுபவர்களுக்கென்றேயும், 4-ம் எண்ணின் எதிரிகளுக்கு பொதுவாக சட்டம், ஒழுங்கு, நேர்மையை மாசுபடுத்துகிறார்களே என்றேயும் கொள்ளலாம். எண் நான்குதாரர்கள் உலகார்ந்த உண்மைகளை விளக்கிப் பேசி அவற்றால் வெற்றி பெறுவதுஅபூர்வம். ஆக்கப்பூர்வமான காரியங்களை படைக்கும் விஷய ஞானம் வந்துவிட்டால் இவர்கள் தலை சிறந்த துறையில் பெரும்பேறு பெறலாம். இவர்கள் பொருள் சம்பாதிக்கும் விதமும் அதைப் பயன்படுத்தும் விதமும் சேர்க்கும் விதமும் அலாதியாகக் காணப்படும். இவர்களது மாபெரும் தவறு யாதெனில், அதிக உணர்ச்சிப் போராட்டங்களுக்கும், மனத்தை உறுத்தும் விஷயங்களுக்கும் இடங்கொடுத்து அதனால் எழுகின்ற உணர்வு வலியைத் தாங்கிக் கொள்ளாமல் தவிப்பார்கள். அந்நேரத்தில் இவர்களுக்கென்று அந்யோந்நிய நண்பர்கள் வாய்ப்பது அரிதாதலின் இவர்கள் தனிமையின் ஏக்கத்தில் அல்லாடித் திரிந்து மிக மனச்சோர்வடைவார்கள். வெற்றி என்று இவர்கள் நினைத்த மாத்திரத்தில் கிட்டாவிடில் கன்னத்தில் கை வைத்துக்கொண்டு கப்பலே கவிழ்ந்ததுபோல் உட்கார்ந்து உளைச்சலுக்கு ஆளாவார்கள்.

திரு. E. S. குமரன், B.Sc.
சேலம்.

## எண்ணைக் கொண்ட தேதிகள்:

4,13,22,31 தேதிகளைக் கொண்ட எந்த மாதமாயினும் அல்லது இவர்களது உச்சகாலக் கட்டங்கள் என்று சொல்லப்படும் சூரியன் மற்றும் சந்திரனின் இராசிக் காலங்களான மாதங்கள். அதாவது சூரியன் ஆட்சி செலுத்தும் காலங்களான 21 ஜூலையிலிருந்து ஆகஸ்டு 31 வரையிலும் மற்றும் சந்திரன் பரிமளிக்கும் நிலைகளான 21 ஜூனிலிருந்து 20ம்-27ம் கொண்ட ஜூலை வரை. மேற் சொன்ன உச்ச காலங்களில் இவர்கள் தீட்டும் திட்டங்களுக்கு வெற்றி கிட்டலாம்.

## எண்ணின் தேவதை

'Uranus' என்று சொல்லப்படும் சூரியனைச் சுற்றிவரும் ஒரு கிரகம். கிரேக்க புராணங்களின்படி பூமி தேவதையின் மைந்தன்.

17

### முக்யமான தினங்கள்

சனி, ஞாயிறு மற்றும் திங்கள்.

### முக்யமான தேதிகள்

உச்ச கால மாதங்கள் அல்லது முதல்தரமாக 4, 13, 22, 31, போன்றவை. இரண்டாந்தரமாக 1, 2. 7 வழி வரும் தேதிகள், அதாவது 10,11 16 போன்றன.

### முக்யமாக வேண்டிய நட்பு

இவர்களுக்கு நண்பர்கள் அரிது. அவர்களின் தொடர்பு 1, 2, 7, 8 போன்றவர்களுடன் தெளிந்து பழகினுல் பாதகமில்லை. சுமுகமான வாய்ப்புக்கள் நேரிடலாம்.

### முக்யமான நிறங்கள்

அங்கும் இங்கும் பட்டுச் சிதறித் தெரியும் அரைப் புள்ளிகள் கோடுகளிட்ட 'மின்சார நிறங்கள்' சுமுகமானவை. மின்சார நீலம் (நீலமிட்ட இளம்பச்சை, பசுமை நீலம், மற்றும் சாம்பல் நீலம், சாம்பல் நிறம்).

### முக்யமான மணிகள் (நகைகள்)

அதிருஷ்டமுள்ள 'Transparent Precious stone' என்று சொல்லப்படுகிற 'Sapphire' என்னும் நீலக்கல். இது பந்தயங்களில் ஜெயிக்க உபயோகப்படுத்தலாம். இதைப் பதித்த நகைகளோ, மோதிரமோ உசிதமானவை.

### முக்யமான உடைகள்

பொதுவாக 'மின்சார நிறங்களில் ஆடைகள்' அணியலாம். நீலம், சாம்பல் நீலம், மின்சார நீலம் (விட்டு விட்ட மெல்லிய நீல இழைகள்) கொண்ட உடைகள் கவர்ச்சியும் மதிப்பும் தரும். கூடிய மட்டில் உரத்த, மற்றும் ஆழ்ந்த 'Dark' நிறங்களில் உடைகள் அணிவது கூடாது.

### சங்கீதத்தில்

கோர்ஷ்டி சங்கீதத்தில் அதிக ஈடுபாடும் உள்ளக்கிளர்ச்சியும் ஏற்படும். இவர்கள் தங்களுக்கென்று ஒரு குழு அமைத்து இசையைப் பரப்பவோ அல்லது குழுக்கள் பல சேர்ந்து பாடும் இசையின் உச்ச ஸ்திதியை இரசிக்கவோ செய்வார்கள். ஆனுலும் இவர்கள் சங்கீதத்தில் அல்லது இரசனையில் ஒருவகை சோகமும், உருக்கமும், மத சம்பந்தமான ஊக்கரசனையும், சாவு கீத தாபமும் குடிகொண்டிருக்கும்.

### உடற்கோளாறுபற்றி

இவர்களின் முதல்தரமான வியாதி உடலைப் பொறுத்தது அல்ல. மனதையும் கவலையையும் பொறுத்தது. வெற்றிக்கு பங்கம் நேரிடும்போதெல்லாம் தன் வாழ்நாளின் ஒவ்வொரு க்ஷணமும் வீணன நாட்கள் என்று மனதையும் இதயத்தையும் சோக இரசத்தில் அலையவிட்டு மூழ்கிக் கொண்டிருந்தால் முயற்சியைத் தேடும் தன்னம்பிக்கை எப்படி உருவாகும்? Melancholia, என்ற மனக்கவலை நோயும், மன அமைதியின்மையால் மனக்கிளர்ச்சி நோயும் ஏற்படும். ஒரு சாதாரண வைத்யன் (An ordinary or common Doctor) இவர்களின் உடற் கூறுபற்றி ஆராயப் போனுல் அவர்களின் ஆராய்ச்சிக்கு முட்டுக்கட்டைப் போட்டுவிடும் ஒருவகை மன நோய்க்காரர்கள் இந்த எண்தாரர்கள். ஆழ்ந்த சோக உளைச்சலின் உச்ச ஸ்திதியில் Anaemia, தலைவலி, முதுகுவலி, மூத்திரப்பை, மூத்திரக்குழாய் மற்றும் அதன் உறுப்புக்களில் வலி ஏற்படலாம்.

### முக்யமான மாற்றங்கள்

பொதுவாக இவர்களுக்கு ஜனவரி, பிப்ரவரி, ஜூலை, ஆகஸ்டு, செப்டம்பர் போன்ற மாதங்கள் வரும் 13, 22 31, 40, 49, 58 வருட வயதுக் காலங்களில் உடலிலும் மற்றும், நோயிலும் மாற்றங்கள் ஏற்பட வாய்ப்புக்கள் உண்டு.

### எச்சரிக்கை

எதற்கெடுத்தாலும் செய்த காரியத்திற்கும், வாய்ச் சொல்லிற்கும் பொருந்தாத மாற்றங்கள் தவருக ஏற்படும் வேளையில், வீணன மனக் கவலைகளினுலும், உணர்ச்சிப்போராட்டங்களினுலும் அலைக்கடித்துக் கொண்டு செயல்களோ கருத்துக்களோ விபரீதமாகப் போய்விட்டதே என்று தனக்குள் எதிர்ப்பார்க்கும் மூடத்தனத்தை ஆரம்பத்திலிருந்தே கைவிட்டால் நோய் கிட்ட நெருங்கவே அஞ்சும். எதிலும் 'Self Consciousness' கொண்டு செயலாற்றினுல் ஓரளவு மாற்றங்கள் காணலாம்.

### முக்யமான இயற்கை வைத்யம்

உணவோடு அடிக்கடி பசலைக் கீரை சேர்த்துக் கொள்ளலாம். இவர்கள் மன நோய் நிபுணர்களிடம் தங்களைப் பற்றியும், நிலையைப் பற்றியும் பொய் கூருது பேசி, மன மாற்றமடைந்து வழி காணவும், கருத்துக்களைப் பரி மாறிக் கொள்ளவும் வைத்திய ஆலோசனை பெறலாம். காலையிலும் மாலையிலும் ஒரு மணி நேரம் அந்த ராத்மான த்யானத்தில் இஷ்ட தேவதையைக் குறித்து பாராயணம் செய்யலாம். இவைகளுக்குள் மாற்றம் தெரியாவிட்டால் 'Hypnotism' முறையில் அந்த நிபுணர்களிடம் ஆலோசனை பெற்றுக் கொள்ளலாம்.

### முக்யமான நபர்கள்

ஜார்ஜ் இலியட், பெட்ரண்ட் ரஸ்ஸல், சேஜ் பாரன்ஹீட் போன்றவர்கள் நான்காம் எண்தாரர்களுக்கு வழிகாட்டிகள்.

பகுதி — 8

## எண் ஐந்தின் தன்மைகளும் கொள்கைகளும்

எண் ஐந்தைத் தன்பால் கொண்டவர்கள் உள்ளூர உணர்ச்சி வசப்படக் கூடியவர்கள். அவர்களின் எண்ணங்களும் செயல்களும் சுறுசுறுப்புத் தன்மையில் செயல்படக் கூடியவனவாகக் காணப்படும். அவர்கள் தீர்மானங்களியற்றுவதில் க்ஷண நேரங் கூடத் தாமதிக்க உடன்படமாட்டார்கள். எள்ளென்ருல் எண்ணெயாக்கிக்

காட்டும் ஒரு சித்துத் தேவதையைப் போல் அவர்கள் முடிவுகள் அவ்வளவு எளிதில் பிறந்துவிடும். மற்ற எண்களைப்போல் ஒருவரின் செயல்களை ஆழ்ந்து விமரிசித்துக்கொண்டு, அவற்றின் மூலம் குற்றங்குறைகளைச் சுட்டிக் காட்டி உள்ளூர புழுங்கும் நோக்கமோ அல்லது வெளியில் கொட்டித் தீர்க்கும் வேகமோ இவர்களிடமே இல்லாத ஒரு தனிப்பட்ட விசேஷம். அதாவது எதையும் மறந்து மன்னித்து விடக்கூடத் தெரியாத பிறவிகள். அவன் இதைச் சொன்னான், இவன் இப்படித் தூஷித்தான் என்றெல்லாம் தரம்பிரித்துப் பார்த்துக் குறை சொல்ல இவர்களெல்லாம் நேரத்தை வீணடிக்கமாட்டார்கள். இந்தச் செவியில் வாங்கி அந்தச் செவியில் விடக்கூடிய நிகழ்ச்சிகள் மற்றவர்களுக்கு அசாதாரணம்; இவர்களுக்கோ படு சாதாரணம். இவர்கள் வாழ்நாள் முழுதும் ஆராய்ச்சிக்கும் கண்டுபிடிப்புக்கும் செலவழித்தே ஏதாவது ஒன்றைச் செய்து தீர்த்துத்தான் நிம்மதி அடைவார்கள். அதாவது இவர்கள் ஆராய்வின் முடிவில் உருவாகும் பொருளைப் பற்றியும் இவர்களுக்கு வரும் பொருளைப் (செல்வத்தையும்)பற்றியும் அக்கறைப் படமாட்டார்கள். ஆனாலும் இவர்களுக்கு ஆராய்ச்சியின்பேரில்தான் செல்வம் வர வாய்ப்புக்கள் காணப் படுகின்றன. இவர்களுக்கு வாய்த்திருக்கும் ஆழமான படுகுழி என்னவெனில் அவர்கள் தங்களுடைய நரம்புகளின் பலத்தை அத்துமீறி பயன்படுத்துவதன் விபரீதத்தால் அடிக்கடி நரம்புகளின் கட்டாயமான வேலை இன்மையின்றி Break downக்கு பலியாகிறார்கள் என்றே சொல்லலாம். அதாவது இந்த Nervous breakdown சாதாரணமானதல்ல. மிகவும் விபரீதம் வாய்ந்த கொடுந்தன்மை கலந்தது. இவர்கள் உள்ளத்தில் சிறு அதிர்ச்சியோ, சலனமோ, படபடப்போ அதிக உழைப்பின் பேரிலோ, தோல்வியின் பேரிலோ ஏற்படின் அதனால் இவர்கள் எரிச்சலுக்கும் பெருத்த நெஞ்சு தாக்குதலுக்கும் தன்னை அடிக்கடி அர்ப்பணித்துக் கொள்வார்கள். ஏதேனும் ஒரு விஷயத்தில் இவர்களை நேரடியாக திட்டினால் மட்டும் இவர்கள் கோபப்படுவார்கள். அந்த கோபமும் கொஞ்ச நேரத்திற்குத்தான் பரிமளிக்கும். பின்னர் அலைபோல் பொங்கிக் கரைச் சேர்ந்துவிடும், ஆறிவிடும்.

## எண்ணைக் கொண்ட தேதிகள்

*5, 14, 23,* தேதிகளைக் கொண்ட எந்த மாதமாயினும் சரி அல்லது இந்த எண்தாரர்களின் உச்ச காலக் கட்டங்கள் என்று சொல்லப்படும் மாதங்களான மே 21லிருந்து ஜூன் 20-27 தேதி வரையிலும் அல்லது 21 ஆகஸ்டு மாதத்திலிருந்து 20–27 செப்டம்பர் மாதங்கள் வரையிலும் ஆற்றும் செயல்கள் வெற்றிதரும்.

## எண்ணின் தேவதை

புதன் (Mercury).

## முக்யமான தினங்கள்

புதன் மற்றும் வெள்ளி.

## முக்யமான தேதிகள்

*5, 14, 23,* ஐக் கொண்ட எந்த மாதமாயினும் சரி அல்லது உச்ச காலக் கட்டங்கள்.

## முக்யமான நட்பு

இவர்களுக்குப் பொதுவாக நண்பர்களோ விரோதிகளோ குறிப்பிடும்படி இல்லை. நீங்கள் என்றாலும் சரி அவர்களாயினும் சரி.

## முக்யமான நிறங்கள்

மினுமினுத்துக் கொண்டிருக்கும். அல்லது பளீரென்று இருக்கும் எல்லாவகை மெல்லிய சாம்பல் நிறத்திலிருந்து வெள்ளை வரை தீட்டிய நிறங்களோ இழைகளோ புட்டாவோ எடுப்பாக இருக்கும். பொதுவாக வெள்ளை கொள்ளை கொள்ளும்.

## முக்யமான மணிகள் [நகைகள்]

வைரம்(Diamond).மோதிரத்திலோ மற்றைய அணிகலன்களிலோ இந்தக் கல்லைப் பதித்து அணிவது அதி உசிதம். மற்றும் பிளாட்டினம், வெள்ளி இரண்டாம் தன்மை வாய்ந்தவை.

## முக்யமான உடைகள்

எந்த நிற உடையிலும் 'Light Colours' பொதுவாக அடர்த்தியற்ற சாம்பல் மற்றும் பளபளக்கும்பொருள் வழி வரும் ஆடைகள் கவர்ச்சி அளிக்கும். வெள்ளை ஆடை முகத்திற்கு இராசிதரும். இவர்கள் படுக்கையறைகளிலும் சாம்பல் நிறத்தினுசுகள் இருக்கலாம்.

## சங்கீதத்தில்

இவர்களின் இசை நாட்டம் எத்தன்மையது என்று வரையறுக்க ஒண்ணாதது. மிகவும் தழுவலற்ற நாட்டுப் பாடல்களின் இயற்கையான சூழ்நிலையில் மனதைச் செலுத்தினாலும் செலுத்துவார்கள் அல்லது ஓசை நயங்கள் எழும் விதவிதமான உலகார்ந்த இசைக்கிளர்ச்சியிலும் ஸ்வரங்களை இரசிப்பார்கள். அதாவது வீசும் தென்றலில் சப்தஸ்வரங்களைக் காணும் இவர்கள் கொட்டாவியிலும் இசையை இரசிப்பார்கள். ஆனால் இன்னார் ஒரு கோஷ்டி சங்கீதத்தையோ, தட்டும் பேரொலியிலோ மனதைச் செலுத்துவாராயின் அதுதான் இவர்களுக்கும் பிடிக்க வேண்டும் என்பதில் கட்டாயம் ஏதும் இல்லை. மற்றும் நரம்பு வாத்யங்களிலும் காற்றுவகைக் கருவிகளிலும் மற்றவர்கள் நாடிச் சென்றால் இவர்கள் இதனை விரும்பி இரசிக்கமாட்டார்கள் என்பதிலும் கட்டாயம் இல்லை. சமயத்திற்கும் சூழ்நிலைக்கும் இவர்களின் கலா இரசனை அபூர்வமாய் இருக்கும். "Beaten Track" எனப்படும் தேய்ந்த சுவடுகளைப் பின்பற்றுபவர்களாக இவர்களை ஒரு புறம் எடைபோடுவோமேயானால் இவர்களின் மற்றொரு மனநிலையில் "Follow Track" எனப்படும் பின்பற்றும் சுவடுகளைப் பொறுத்து இவர்களையே இசை இரசனையில் மற்றவர்களும் பின்தொடரலாம். அதாவது ஒரு குறிப்பிட்ட ஓசை வழியிசையை விரும்பவோ வெறுக்கவோ செய்யாத சலனமற்ற பேர்வழிகள்.

(24-ம் பக்கம் பார்க்க)



கி. பி. 15-ம் நூற்றுண்டைச் சார்ந்த ஸ்ரீ அன்னமாச்சார்யா அவர்கள் தம் வாழ்நாட்களில் பயன்படுத்திய அன்றுடப் பூஜைப் பொருட்களை, டாக்டர். சி. நாரா யணரெட்டி அவர்கள் பார்வையிடுகிறுர்.



ஹைதராபாத் உஸ்மானியா பல்க
தெலுங்குத்திரைப்படக் கவிஞருமான
விற்குத் தலைமை வகித்தார்.

அண்மையில் திருப்பதி ஸ்ரீ அன்னமாச்
பாடல்களை இயற்றிய கி. பி. 15-ம் நூற்
ரும், வேங்கடவனின் பக்தருமான தாள்
பிறந்த நாள் விழா முதன்முதலாக இவ்
தாரால் கொண்டாடப்பட்டது.

*தாள்ளபாக்க ஸ்ரீ அ*

**570-**

# ஜெயந்

570-வது ஜெயந்தி விழா சம்பந்தப்பட்ட மலர் ஒன்றினை தி.தி: தேவஸ்தான -தவி செயலாட்சித்தலைவர் திரு. வை. வெங்கடப்பய்யா அவர்கள் வெளியிட்டார்.







கழகத் தெலுங்குத்துறைத் தலைவரும்,
.ர். சி. நாராயணரெட்டி அவர்கள் விழா

ா கலாமந்திரத்தில், சுமார் 32,000
ன்டைச் சாந்தத் தெலுங்குக் கவிஞ
ாக்க அன்னமாச்சார்யாவின் 570-வது
ண்டு முதல் தி. தி. தேவஸ்தானத்

## னமாச்சார்யாவின்
## து
# விழா



விழாவின் இறுதி நாளன்று குமாரி. சோபாநாயுடு அவர்களுடைய அன்னமாச்சார்யா சம்பந்தப்பட்ட நாட்டிய நிகழ்ச்சி ஒன்று நடைபெற்றது.



விழாவில் பங்கேற்ற கூச்சுப்பூடி புகழ் திரு. வெம்பட்டி சின்ன சத்யம் அவர்கள் தி. தி. தே. உதவி செயலாட்சித் தலைவர் அவர்களால் கௌரவிக்கப்பட்டார்.



# திருவரங்கத்து எம்பெருமான்

திவ்யகவி என்று புகழப்பெறும் பிள்ளைப்பெருமாள் அய்யங்கார் இயற்றியருளிய எட்டு நூல்களின் தொகுப்பே அஷ்டபிரபந்தம் என வழங்கப்படுகின்றது. 'அஷ்ட பிரபந்தம் கற்றவன் அரை பண்டிதன்' என்னும் சிறப்பு பெற்ற இத்தொகுப்பு, ஆழ்வார் பெருமக்கள் அருளிச் செய்த திவ்விய பிரபந்தங்களின் சாரமாகக்கருதப் படுகிறது. 'சொல் நோக்கும் பொருள் நோக்கும் தொடை நோக்கும் துறையின் நோக்கோடு எந்நோக்கும் காண இலக்கிய'மாகும் திருவரங்கக் கலம்பகத்தில், திருவரங்கத்தில் அறிதுயில் கொண்டிருக்கும் அரங்கநகர் அப்பனின் பெருமைகளையும், அடியவர்க்கு அருள்புரியும் அவனுடைய கருணையையும், அவனை மனமார எண்ணி வணங்குவோர் பெறும் பயனையும், திருவரங்கனே தனக்குத் தலைவன் என்பதையும் மிகச் சிறப்பாகக் கவிதைநயத்துடன் பாடியுள்ளார் அய்யங்கார்.

### திருவரங்கனே பிரான்:

திருவரங்கத்து எம்பெருமான்தான் தனக்குத் தலைவன்; அவன் ஒருவனுக்கே தான் அடிமை; தன்னுடைய எண்ணம் அரங்கனைத் தவிர வேறு ஒருவர்மீதும் செல்லாது என அறுதியிட்டு உரைக்கிறார் அய்யங்கார்.

> எனக்கே திருவரங்கனே பிரான், எம்மான்
> தனக்கே அடிமை தமியேன்;—புனக் கேழ்
> மருத்துளவோன் மேலன்றி மற்றொருவர் மேல்என்
> கருத்துஉளவோ ஆராயுங் கால் (2)

(புனம்-வனம்; கேழ்-ஒளி; மரு-வாசனை; துளவோன் - திருத்துழாய் (துளசி) மாலையையுடைய அரங்கன்).

எம்பெருமானுக்கும் தனக்கும் இடையேயுள்ள ஸ்வஸ்வாமி பாவ உறவை-இறைவன் தலைவன், நாம் அவனுடைய உடைமைஎன்ற உறவை-உணர்ந்து கொண்டு, இனி அவன் ஒருவனுக்கே தொண்டு புரிந்து ஒழுகுவதாகக் கூறுகிறார். 'மற்று ஒருவர் மேல் என் கருத்து உளவோ' என்ற குறிப்பினால், ஐயங்காரின் வாய் அரங்கனை அன்றிப் பிறரை வாழ்த்தாது, ஐம்புலன்களும் அவனுக்கே பணிவிடை புரியும் என்பது பெறப்படுகிறது. பிறிதோர் பாடலிலும் இக்கருத்தை அவர் வலியுறுத்துகிறார்:

> கேசவனையே செவிகள் கேட்க; திரு அரங்கத்து
> ஈசனையே சென்னி இறைஞ்சிடுக;- நேசமுடன்
> கண்ணனையே காண்கஇரு கண்;இணர் கொள் காயாம்பூ
> வண்ணனையே வாழ்த்துகஎன் வாய் (20)

(கேசவன்–1. பிரமனையும் உருத்திரனையும் தன் அங்கத்தில் கொண்டவன்; 2. அழகிய மயிர் முடியை உடையவன்; 3. கேசி என்னும் அசுரனைக் கொன்றவன்).

மனிதப் பிறவி எடுத்ததன் பயன் - இறைவனை மனத்தினால் நினைத்தலும், வாயால் துதிப்பதும், கைகளால் பூசித்தலும், கால்களால் பிரதட்சிணம் செய்தலும், தலையால் வணங்குதலும், கண்களால் தரிசித்தலும், செவிகளால் அவன்புகழ் கேட்டலும், மூக்கினால் அவன்தன் மாலையை மோந்து நுகர்தலுமே என்பதைக் குறிக்கிறார் அய்யங்கார். அவருடைய இப்பாடல்,

> வாயவனை யல்லது வாழ்த்தாது, கையுலகம்
> தாயவனை யல்லது தாம்தொழா,— பேய்முலைநஞ்சு
> ஊணாக உண்டான் உருவொடு பேரல்லால்,
> காணாகண் கேளா செவி,
> (முதல் திருவந்தாதி-11)

என்ற பொய்கை ஆழ்வார் பாசுரத்தை நம் நினைவுக்குக் கொண்டு வருகிறது.

### அரங்கனின் பெருமை:

திருவரங்கத்தை இடமாகக்கொண்ட எம்பெருமானின் பெருமைகளை - அவதாரச் சிறப்புகளை-ஒரு பாடலில் (10) தொகுத்து தருகின்றார் அய்யங்கார். (1) காளியன் என்னும் நாகத்தின் மேல் நடனம் ஆடியவன். (2) வலிமை மிக்க சிவனுடைய வில்லை ஒடித்தவன். (3) அடர்ந்த காட்டை நடந்து கடந்தவன். (4) பூமியைக் கோட்டால் குத்தி எடுத்தவன். (5) குரவைக் கூத்து ஆடியவன். (6) கடலில் அணை கட்டியவன். (7) கோசலையால் பெறப்பட்டவன். (8) வீசுகிற திருப் பாற்கடலின் அலையில் பொருந்தியவன். (9) முரன் என்னும் அசுரனை அழித்தவன். (10) கரன் என்னும் அரக்கனை அழித்தவன். (11) தன் அடியவர்க்கு மோட்சம் அளிப்பவன். (12) கஜேந்திரனால் 'ஆதிமூலமே' எனக் கூவி அழைக்கப்பட்டவன். (13) பரமபதத்தில் எழுந்து அருளியிருப்பவன். (14) பிரபத்தியை (சரணாகதி) தன்னை அடையும் வழியாக உடையவன். (15) ஆலிலையைப் படுக்கையாகக் கொண்டவன் - ஆகிய இத்துணைப் பெருமைகளையும் கொண்டவனே திருவரங்கத்தில் எழுந்தருளியிருப்பவன் என்கிறார் அய்யங்கார். இவை மட்டுமின்றி, கணக்கிட முடியாத பெருமையை உடையவன். அரங்கன் என்கிறார். திருவரங்கனுக்கு உணவு - பதினான்கு உலகங்கள்; படுக்கை-ஆதிசேஷனையுடைய திருப் பாற்கடல்; மனைவியர்-பூமகளும் நிலமகளும்; வீற்றிருக்கும் இடம்-வேதங்களுக்கும் எட்டாத பரமபதம்; வாகனம்-கருடன்; குமாரன்-பிரமன்; பேரன்-உருத்திரன்; ஏவலர்-இந்திரன் முதலான முப்பத்து மூன்று கோடி தேவர்கள்; விளையாட்டுப் பொருள்-உலகமும் உயிர்களும்-என்னும் பெருமையினை உடைய அரங்கநாதனை

திரு. ந. கடிகாசலம் எம்.ஏ.,
வேலூர்.

வாழ்த்த வல்லார் எவரேனும் உண்டோ என்று ஒரு பாடலில் (32) வியக்கிறார் அய்யங்கார்.

## அய்யங்காரின் பெருமிதம்:

'அழகிய அரங்கநாதனே! மாவலியினிடத்து நீ மூன்றடி மண் இரந்து கேட்டு, ஈரடியால் உலகை அளந்து கொண்டபோது-மண்ணுலகம், மூவுலகிலும் பரவிய உன் திருவடிகள், அத் திருவடிகளைத் தன்னுள் அடக்கிக் கொண்ட என்மனம்-ஆகிய இவற்றுள் எது பெரிது?' என்று வினவுகிறார் அய்யங்கார். எம்பெருமானின் திருவடிகள் உலகங்களையெல்லாம் தன் ஈரடிக்குள் அடக்கிக் கொண்டமையால் அவை மிகப் பெரியன; அத் திருவடிகளைத் தன் நெஞ்சு தன்னுள் அடக்கிக் கொண்டிருப்பதால், அவனுடைய திருவடிகளைக் காட்டிலும் தன் நெஞ்சமே பெரிது என்று பெருமிதம் கொள்கிறார் அய்யங்கார். திருவடிகளை நெஞ்சில் அடக்கிக் கொள்ளுதல் என்பது திருவடிகளை எப்பொழுதும் உள்ளத்தில் கொண்டு தியானித்தல் என்பதாகும். இக்கருத்து அமைந்த பாடல் இது:

சேவடியால் மூவடிமண் தென்னரங்கத்து அம்மான்நீ
மாவலிபால் வாங்கியநாள் மண்ணுலகோ—மூவுலகும்
வீசுங்கா லோவலிய வெவ்வினையேன் நெஞ்சமோ
பேசுங்கால் ஏதோ பெரிது. (29)

(சேவடி-சிவந்த பாதம்; மாவலி-மகாபலி சக்கரவர்த்தி; வீசும் கால்-பரவிய கால்).

வன்மையான கொடிய வினைகள் உடைய நெஞ்சம் தனதாக இருந்தாலும் எப்போதும் அரங்கனின் திருவடிகளை நெஞ்சில் வைத்து தியானிப்பதால் அது பெருமை மிக்கது என்று உணர்த்தும். அவர்தம் (இப்)பாடல், கீழ்க்காணும் நம்மாழ்வார் பாசுரத்தை அடியொற்றி அமைந்துள்ளது எனலாம்.

'' புவியும் இருவிசும்பும் நின்னகத்த, நீயென்
செவியின் வழிபுகுந்தென் னுள்ளாய்,—அவிவின்றி
யான்பெரியன் நீபெரியை என்பதனை யாரறிவார்,
ஊன்பருகு நேமியாய் உள்ளு.''

(பெரிய திருவந்தாதி-75)

## வணங்குவோர் பெறும் பயன்:

அரங்கனை வணங்குபவர்கள் பெறும் பயன் குறித்தும் அய்யங்கார் பாடியுள்ளார். அரங்கனை எம்பெருமான் என்று எண்ணி அன்புடன் நெஞ்சு உருகித் துதிக்கவல்ல அடியவர்கள் வைகுண்டத்தை அடைவர். இதை,

'' பொன்னரங்கன் என்றே
மால்ஆய் இரங்கவல்லார்க்கு எய்தலாம்
திருவைகுந்தமே.'' (3)

என்னும் வரிகளில் தெரிவிக்கிறார். மேலும், திருவரங்கம் பெரிய கோயிலில் பாம்பணையின்மேல் பள்ளிகொண்டருளும் எம்பெருமானின் திருநாமங்களில் ஏதேனும் ஒரு திருநாமத்தையேனும் உச்சரித்தவர்கள் - சிவன், தேவேந்திரன், பிரமன் ஆகியோரைக் காட்டிலும் மேன்மையாக வீற்றிருப்பர். (4)

## அரங்கநாதனை வணங்குங்கள்:

திருவரங்கநாதனை வணங்கி பயன் பெறும்படி அறிவுரைகூறுகிறார் அய்யங்கார். (1) ஆய்ப்பாடியில் இடையர் வீட்டில் வளர்ந்தவனும், அநந்தன் என்னும் பெயரை உடையவனும், அரவணையில் பள்ளிகொண்டு அருள் புரிகின்ற மாயவனுமாகிய திருவரங்கனை வணங்குங்கள். அங்ஙனம் வணங்குவீரேயானால் உலகத்தில் வேறு சில மதங்களைத் தேடி அலையும் பேய்த்தன்மையான அறிவை விட்டு, எழுவகைப் பிறவிகளைப்போக்கி முக்தி பெறுவீர்கள் (13); (2) எம்பெருமானை வணங்க மறந்திருப்பவர்களே! நீங்கள் திருவரங்கம் பெரிய கோயிலைச் சேர்ந்து, அதனால் உங்கள் மாறுபாடுகள் எல்லாம் ஒழிந்து போமேயானால் தாம் வீற்றிருக்கின்ற பரமபதத்தை அளித்து அரங்கநாதர் அருள்புரிவார்.

'' திருவரங்கம் திருக்கோயில்
சேர்ந்துமது திருக்குஓயில்
தருவர்என்றும் வைகுந்தம்'' (41)

(திருக்கு-மாறுபாடு; ஓயில்-ஒழிந்தால்) என்று அரங்கனின் கருணையையும் புலப்படுத்துகிறார்.

## திருவரங்கனை வணங்குபவர் பெருமை:

இனி, திருவரங்கநாதனை வணங்கும் அடியார்க்கு உரிய பெருமை குறித்து அய்யங்கார் கூறும் கருத்துக்களைக் காண்போம். கற்பதற்கு உரிய எல்லா நூல்களையும் கற்றுத்தேர்ந்தவர்களேயானாலும், பதினான்கு உலகங்களையும் கண்டவர்களேயாயினும் நீக்குதற்கரிய இருவகைப் பற்றுக்களும் நீங்கியவர்களேயாயினும்- திருமால் அடியார்களாக இல்லாதார் மோட்சம் பெறத் தகுதியில்லாதவர்களாகின்றனர். திரு

வேலூர் கோட்டையில் ஒரு சிற்பம்.
திரு. டி. எஸ். ஈஸ்வரராவ், சித்தூர்.



மகளின் கணவனுன திருமால் துயிலும் திருவரங்கம் பெரிய கோயிலைப் பணிந்து வணங்குவோர் மேற்குறிப்பிட்ட கற்றல், காணுதல், அறுதல் ஆகிய குணங்களைக் கொண்டில்லாவிட்டாலும் முத்தி பெறுபவர்களாகிறுர்கள் என்பது அய்யங்கார் கருத்து. இதனை,

'' கற்றுர்எனினும், பதிஞல்உலகும்
கண்டார்எனினும், தண்டா
மிகுபற்று
அற்றுர்எனினும், திருமால்அடியார்
அல்லாதவர் வீடுஇல்லாதவரே;
பொற்றுமரையாள் கணவன்துயிலும்
பொற்கோயிலையே புகழ்வார்,
பணிவார்,
மற்றுஆர்ஏனினும், பெற்றுர்அவரே
வாஞேர்திருமா மணிமண்டபமே.''
(5)

(தண்டா-நீங்குதலரிய; பொற்றுமரையாள்-பொன் தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள்; பொற்கோயில்-திருவரங்கம்; வாஞேர்-நித்திய சூரிகள்).

என்று பாடலாக வடித்து நமக்குத் தந்துள்ளார். மேலும், எம்பெருமானை வணங்கித் தொண்டு புரிவதே ஒருவருடைய மேன்மைக்குக் காரணம், உயர் குலப்பிறப்பு அன்று; அவ்வாறு தொண்டு புரியாமல் வணங்காமல் இருப்பதே தாழ்ச்சிக்குக் காரணம், இழிகுலப் பிறப்பன்று என்பதைக் கீழ் வரும் பாடலில் தெரிவிக்கிறுர்:

'' பாதியாய் அழுகியகால் கைய ரேனும்,
பழிதொழிலும் இழிகுலமும்
படைத்தா ரேனும்,
'ஆதியாய் அரவணையாய்!' என்பராகில்
அவரன்றே யாம்வணங்கும் அடி
கள் ஆவார்;
சாதியால் ஒழுக்கத்தால் மிக்கோ
ரேனும்
சதுர்மறையால் வேள்வியால்
தக்கோ ரேனும்
போதிஞன் முகன்பணியப் பள்ளி
கொள்வான்
பொன்னரங்கம் போற்றுதார்
புலையர் தாமே'' (15)

(மிக்கோர் - உயர்ந்தோர்; சதுர் மறை-நான்கு வேதங்கள்; வேள்வி-யாகம்; தக்கோர்-சிறந்தோர்; போதில் நான்முகன்-தாமரை மலரில் தோன்றிய பிரமன்).

மேலும், இன்னெரு பாடலில் (100) திருவரங்கனையே தஞ்சம் எனக் கொண்டு வாழ்வோர் இழிந்த குலத்தில் பிறந்தவர்களே யாஞலும்கூட அவர்கள்தான் தேவர்கள், முனிவர்கள், சிவன், பிரமன் ஆகியோரைக் காட்டிலும் மிகுந்த சிறப்பினை உடையவர்கள் என்று பலபடப் புகழ்கிறுர். அய்யங்காரின் இவ்விரு பாடல்களும் தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிச் செய்த பாசுரங்களைத் (திருமாலை: 42, 43) தழுவி அமைந்திருப்பதை ஒப்பிட்டு நோக்குவதால் அறிய முடிகிறது.

அய்யங்கார், 'அரங்கனைப் பாடும் வாயால் குரங்கனைப் பாடேன்' என்ற உறுதி கொண்ட உள்ளத்துடன், மறந்தும் புறந்தொழாதவராய் அரங்கனின் பெருமைகளைப் பலபடப் புகழ்ந்து பாடியுள்ளதை அவர்தம் பாடல்கள் மூலம் அறிகிறேம். திருவரங்கம் பெரிய கோயிலின் சிறப்பு, திருவரங்கனின் பெருமை, அவனை வணங்கும் அடியவர்களின் பெருமை ஆகியவற்றை மிகவும் சிறப்பாகப் பாடல்களில் வடித்துக் கொடுத்துள்ளார் அய்யங்கார் என்பதில் சிறிதும் ஐயமில்லை. ★

---

(19-ம் பக்கத் தொடர்ச்சி)

### உடற்கோளாறு

நரம்புகளின்பால் தளர்ச்சியும் அடிக்கடி செய்கைகளும் இடைவிடாது தொந்தரைகளிஞல் அவற்றிற்கிடையே இருக்கும் கட்டுக் கோப்பு, அவர்கள் உள்ளத்தையே துண்டாக்கும் வகையில் அதிர்ச்சியுறும். மேலும் 'Neuritis' எனப்படும் நரம்பு வீக்கம் முகத்தில் உதறல் (நடுக்கம்) போன்ற நோய்களும், கண் துடிப்பு, கை கால் படபடப்பு, நரம்புச் சோர்வு, பலவீன மான எலும்பு நோய், 'Insomnia' என்னும் தூக்கமின்மை நோய், 'Paralysis' (முடக்கு வாதம்) போன்ற நரம்புகளின் அசாதாரணமான வேலைகளிஞல் ஏற்படும் மனக்கிளர்ச்சி நோய்கள் ஏற்பட வாய்ப்புண்டு.

### முக்யமான மாற்றங்கள்

பெரும்பாலும் இவர்களுடைய 14, 23, 41, 50ம் வருடங்களில் உடற் சம்பந்தமான மாற்றங்கள் முறையே ஜுன், செப்டம்பர், டிசம்பர் போன்ற மாதங்களில் ஏற்படும்.

### எச்சரிக்கை

மௌனம், தூக்கம்; ஓய்வு போன்ற சாதாரண இயற்கை ஓய்வுகளிஞலேயே இவர்கள் நரம்புகளுக்கும், மூளை போன்ற உறுப்புக்கும் அதிக வேலை தராது ஒரு வகை த்யானத்தில் அலட்டிக் கொள்ளாமல் இருந்தாலே நூற்றுக்கு அறுபது சதவிகிதம் நோய்க்குள்ள அறிகுறியே இருக்காது.

### முக்யமான இயற்கை வைத்யம்

காரட், முள்ளங்கி, போன்ற A வைட்டமின் உணவு வகைகள் மற்றும் ரொட்டி வகைகள் போன்றன அடிக்கடி சேர்த்துக்கொள்ளுதல். ஆராய்ச்சி என்று ஈடுபட்டு சதா நேரமும் மூழ்கியிருக்காமல் ஒரு நாளில் நான்கு மணி நேரம் இடைவிடாத ஓய்விற்கும் அமைதிக்கும் செலவிடுதல் தலைசிறந்த வைத்யமாகும்.

### முக்யமான நபர்கள்

செயின்ட் லூயிஸ் என்பவரான பிரான்ஸ் நாட்டினர். 16ம் லூயி, தாமஸ்ஹீட், புகழ் பெற்ற ஆங்கில நாடக மேதை ஷேக்ஷ்பியர், கார்ல் மார்க்ஸ் மற்றும் Erard (இரார்ட்) (இவர்தான் 'ப்யாஞே' எனப்படும் ஒரு வகை ஹார்மோனியத்தை முதலில் கண்டுபிடித்தவர்), ஆகியோர் 5ம் எண்களின் சந்ததியாளர்கள்.

(தொடரும்)

(15-ம் பக்கத் தொடர்ச்சி)

ஞானதீபத்தினுல் பக்தன் கடவுள் காட்சியை அடையப் பெறுகிருன்.

நாம் ஒரு காரியத்தைச் செய்ய முனேகிறேம். உதாரணமாக, பாதையில் நமக்கு முன்னே ஒருவர் நடந்து சென்று கொண்டிருக்கிருர். அவர் வேகமாகச் செல்லுவதன் காரணமாக அவரது பையிலிருந்து அவருடைய பர்ஸ் நழுவிக் கீழே விழுந்து விடுகிறது அதைக் கவனிக்காத அந்த நபர் விடுவிடென்று நடந்து செல்கிருர். அந்தப் பர்ஸை நாம் பார்த்து விடுகிறேம். அது நமக்கு முன்னே செல்லும் அந்த நண்பருடையதுதான் என்பதும் நமக்குத் தெரியும். அதை எடுக்க வேண்டிக் குனிகிறேம். உடனே நமது மனம் (அதாவது அந்தக் கரணம்) நம்மிடம் சொல்கிறது. ''அதை எடுத்து அதோ போகிருரே அவரிடம் சேர்ப்பித்துவிடு. அது அவருடையது. உன்னுடையதல்ல. பிறரது பொருளுக்கு வீணுக ஆசைப்படாதே. அதே பர்ஸ் உன்னுடையதாயிருந்து அதைஅவர் எடுத்திருந்தால் நீ அவர் எப்படி நடந்து கொள்ள விரும்புவாயோ, அப்படியே இப்பொழுதும் நடந்து கொள். ஓடு, ஓடு. அதைக் கொண்டு உரியவரிடம் சேர்ப்பி' இந்தக் குரல் பகவானின் குரல். இந்தக் குரலுக்கு நாம் செவி சாய்த்தால் நாம் நல்லது செய்து நல்லவர்களாகிறேம். மாருக அல்லது செய்தால் தீயவர்களாகிறேம்.

நாம் தீய காரியத்தில் ஈடுபட முனேயும் போதெல்லாம் பகவான் நமது அந்தர்யாமியாக நமக்கு எச்சரிக்கை விடுக்கிருர் அல்லவா? இதை எவராது மறுக்க முடியுமா? அது ஞானதீபத்தின் விநாடிப் பொழுதைய ஒளியின் விளைவு. நாமோ நமது ஆணவம், அக்ஞானம் காரணமாக அதைப் புறக்கணித்து விடுகிறேம். ஆனுல் பக்தர்களோவெனில் இடைவிடாது அந்தக் கரணத்தின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து அதாவது பகவானின் குரலுக்குச் செவி கொடுத்து யாண்டும் நல்லதையே செய்து நல்லவர்களாயிருக்கிருர்கள்.

'இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க' என மணிவாசகப் பெருமான் இறைவன் தன் மனத்தின் குடியிருந்து தம்மை யாண்டும் வழி நடத்திச் செல்வதாகக் கூறுகிருர். மகான்கள் அனைவருடையவும் ஏகோபித்த அனுபவம் இதுவே.

பகவானது விபூதி மற்றும் ஐசுவரியத்தைப் பற்றியும் இது காறும் கேட்டுத் தெரிந்து கொண்ட அர்ஜுனன் கூறுகிறன்:

பரம் பிரம்ம பரம் தாம
பவித்ரம் பரமம் பவான்|
புருஷம் சாஸ்வதம் திவ்யம்
ஆதி தேவம் அஜம் விபும் ||12||

ஆஹுஸ்த்வாம்ருஷயஃ ஸர்வே
தேவர்ஷிர் நாரதஸ்ததா|
அஸிதோ தேவலோ வ்யாஸஃ
ஸ்வயம் சைவ ப்ரவீஷி மே ||13||

'மேலாம் பிரம்மம், அனைத்திலும் உயர்ந்த இருப்பிடம், ஒப்பற்ற தூய்மை நீரே ஆவீர். அனைத்து ரிஷிகளும், தேவ ரிஷியான நாரதரும், அவ்விதமே அஸிதர், தேவலர், வியாஸர் ஆகியோரும் உம்மை நித்தியமானவன், திவ்விய புருஷன், ஆதிதேவன் பிறவாதவன், எங்கும் நிறைபொருள் என்று கூறுகின்றனர். நீரும் அப்படியே இயம்புகின்றீர்'

குணம் அற்ற உபாதியற்ற பிரம்மமே பரப்பிரம்மமாகும் (நிர்க்குண நிருபாதிக பிரம்மம்) குணத்துடன் கூடிய உபாதிகளுடன் பொருந்திய பிரம்மம் அபரபிரம்மம் அல்லது ஈசுவரன் ஆகும். (ஸகுண ஸோபாதிக பிரம்மம்). சினிமாப்படம் முழுவதுக்கும் எவ்விதம் திரை ஆதாரமாயமைகிறதோ அதுபோல பிரபஞ்சம் முழுவதற்கும் பிரம்மமே அடிப்படையாகும். எனவே அவர் 'பரந்தாமன்' (பரம் தாம) ஆகிருர். முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளான ஆதிதேவன் அவரே. நீர், தீ முதலானவை தாற்காலிகமாகப் பொருள்களைத் தூயதாக்க வல்லவையாம். ஆனுல் ஜீவர்கள் பரப்பிரம்மத்தைச் சாருமளவு பிரம்ம சொருபமாகவே ஆகிவிடுகின்றனர். பிரம்மத்தைச் சேர்ந்த பின்னர் திரும்பப்பிறவி என்பது கிடையாது. அந்த நிலையில் ஜீவர்களது குற்றமெல்லாம் அகலுகிறது. எனவே ஜீவர்களைப் புனிதமாக்குபவைகளில் பிரம்மமே தலையாயது ஆகும்.

இந்த சுலோகத்தில் அர்ஜுனன், ''கண்ணு! நாரதர், வியாசர் போன்ற மகான்கள் கூறுவதும் நீர் கூறுவதும் ஒன்ருகவே அமைகின்றன'' என்று கூறுகின்ருன். இதிலிருந்து நாம் தெரிந்து கொள்ள வேண்டியது என்ன?

## ஆர்ஜித தெப்போற்சவம்

திருமலையில் வருடத்தில் மூன்று நாட்கள் நடத்தப்பட்டு வரும் தெப்போற்சவம், இப்பொழுது யாத்திரிகர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில், ஒவ்வொருவாரமும், செவ்வாய்க் கிழமைகளில் நடத்தப்பட்டு வருகின்றது. அன்று இறைவன் திருப்பள்ளி ஓடையில் (தெப்பத்தில்) எழுந்தருளி பக்தர்களுக்கு அருள் புரிவார். ரூ. 1500/- செலுத்தி பக்தர்களும் இவ்வார்ஜித தெப்போற்சவத்தில் பங்கேற்கலாம். பங்கேற்கும் கிருஹஸ்தர்க்கு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவம் பதித்த சுமார் 5 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒன்றும், வஸ்த்ர பஹுமானமும் மேலும் நைவேத்தியமும் வழங்கப்படும். அது மட்டுமன்றி, கிருஹஸ்தரைச் சார்ந்த 10 நபர்கள், இறைவனின் தரிசனத்திற்காக அனுமதிக்கப்படுவர்.

# தங்கு வசதி விவரங்கள்

| காட்டேஜ் விவரங்கள் | கிடைக்கும் காட்டேஜ்களின் எண்ணிக்கை | நாள் ஒன்றிற்கு வசூலிக்கப்படும் வாடகை விவரங்கள் |
|---|---|---|
| **திருமலேயில்** | | |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரா கஸ்ட் ஹவுஸ் | 30 | இரண்டு படுக்கைகளேயும், ஹீட்டர் ஒன்றையும் கொண்டுள்ள அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 16/- |
| ஸ்ரீநிவாசா காட்டேஜஸ் | 20 | மூன்று படுக்கைகளேயும், ஹீட்டர் ஒன்றையும் கொண்டுள்ள காட்டேஜ் ஒன்றிற்குரூ. 20/- |
| ஸ்ரீநிவாசா காட்டேஜஸ் | 30 | மூன்று படுக்கைகளேயும், ஹீட்டர் ஒன்றையும் கொண்டுள்ள காட்டேஜ் ஒன்றிற்குரூ. 15/- |
| ஸ்ரீநிவாசா காட்டேஜஸ் | | ஹீட்டர் ஒன்றுள்ள பாதி காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 9/- |
| | | ஹீட்டர் இல்லாத பாதி காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 7/- |
| வேங்கடாசல காட்டேஜஸ் | 16 | ,, |
| ஆழ்வார் நகர் காட்டேஜஸ் | 40 | ,, |
| வ்வேலி வ்யூ காட்டேஜஸ் | 9 | மூன்று படுக்கைகளேயும், ஹீட்டர் ஒன்றையும் கொண்ட காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 16/- |
| நாராயணகிரி காட்டேஜஸ் | 12 | ,, |
| சங்கு மிட்டா காட்டேஜஸ் | 81 | இரண்டு கட்டில்களேக் கொண்ட காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 10/- |
| | | பாதி காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 5/- |
| சேஷாத்திரிநகர் காட்டேஜஸ் | 68 | ஹீட்டர் ஒன்றினேக் கொண்ட முழு காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 12/- |
| அஞ்சநாத்ரி நகர் காட்டேஜஸ் | 78 | ஹீட்டர் ஒன்றுடன் கூடிய காட்டேஜின் 'ஏ' பகுதிக்கு ரூ. 7/- |
| கருடாத்ரி நகர் காட்டேஜஸ் | 78 | ஹீட்டர் இல்லாத காட்டேஜின் 'பி' பகுதிக்கு ரூ. 5/- |
| **திருப்பதியில்** | | |
| தி. தி. தேவஸ்தானம் கஸ்ட் ஹவுஸ் | 18 | இரண்டு படுக்கைகளேக் கொண்ட அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 12/- |
| ஸ்ரீநிவாச சத்திரம் (மாடியில்) (மேசை நாற்காலிகளேக் கொண்ட அறைகள்) | 30 | இரண்டு படுக்கைகளேக் கொண்ட அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 12/- |
| ஸ்ரீநிவாசசத்திரம் (கீழ்ப் பகுதியில்) (மேசை நாற்காலி வசதிகளேக் கொண்டது) | 40 | நான்கு படுக்கைகளேக் கொண்ட அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 15/- |

**குறிப்பு:** மேசை, நாற்காலி போன்ற வசதிகள் இல்லாத சத்திரங்களில் தங்கும் அறைகள் யாத்திரிகர்களுக்கு இலவசமாக வழங்கப்படும்.

செயலாட்சித் தலேவர்.
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

மகான்களின் மணிமொழிகள் உண்மையில் இறைவனது கூற்றேயாகும். கட்புலன் ஆகாத இறைவன் மகான்களின் வடிவில் நமக்குக் கட்புலனுகிருர். எனவே குருவின் வாக்கே குகனின் வாக்கு என நாம் திட நம்பிக்கை கொள்ளவேண்டும். 'குருவே பிரம்மா' குருவே விஷ்ணு, குருவே சிவன்' எனக் கூறுகிறது குரு கீதை. 'குருவே சிவமெனக் கூறினுன் நந்தி' என்பது திருமூலர் வாக்கு. மகான்கள் மற்றும் குருமார்களின் வாக்கினே நாம் ஆண்டவனின் அமுத வாக்காக அப்படியே ஏற்கவேண்டும் என்பதை அர்ஜுனன் இதன் மூலம் தெரியப்படுத்துகிருன்.

மகான்களின் கூற்றினே ஏற்பதில் இரண்டு விதங்களுண்டு. ஒன்று மகான்கள் இறைவனுக்கு நிகரானவர்கள் என்ற நம்பிக்கைகொண்டு அவர்களது கூற்றின் தத்துவம் புரியாமலேயே அதை அப்படியே ஏற்றுக் கொள்வது. மற்றது மகான்கள் மகேசனின் சொரூபம் எனத் தெரிவது மட்டுமன்றி, அவர்களது கூற்றின் உட்பொருளேயும் உணர்ந்து அந்த உணர்வின் விளேவாக அவர்களது கூற்றை ஏற்றுக் கொள்வது. முந்தையதில் பிந்தையது சிறந்ததாகும்.

பகவன் நாம சங்கீர்த்தனத்தில் வெறும் இசையில் மட்டும் மயங்கியிருப்பதைக் காட்டிலும், அதனது உட்பொருளேயும் தெரிந்த பின் அதில் ஆழ்ந்து மூழ்கியிருத்தல் சாலச் சிறந்தது ஆகும். இதற்கு முன்னர் வியாசர், அஸிதர் போன்ருேர் பகவானேப் பற்றிக் கூறிய போதெல்லாம் விளங்காத அர்ஜுனன் இப்பொழுது அதையே பகவான் கூறுகையில் அனேத்தையும் புரிந்து கொள்கிருன். காரணம்? முன்பு அவன் அக்ஞானத்தில் உழன்ருன். இப்பொழுது பகவான் அவனிடத்தில் உழன்ருன். இப்பொழுது பகவான் அவனிடத்தில் ஞான தீபத்தை ஏற்றிவிட்டார்.

குருடர்களுக்கிடையில் சூரியன் ஒளிர்ந்தால் அவர்களால் சூரியனுடைய உஷ்ணத்தை உணர முடியுமே தவிர ஒளியைக் காண இயலாது. அதுபோல மகான்களது மணிமொழிகளின் உட்கருத்தினே ஞானம் ஏற்பட்ட பின்னரே உள்ளபடி தெரிந்து கொள்ள முடியும் என்று அர்ஜுனன் ஈண்டு அழகாகத் தெரிவிக்கிருன்.

(தொடரும்)

# கம்பன் கண்ட சரயூ

'' புள்ளி மால்வரை பொன்னென நோக்கி வான்
வெள்ளி வீழிடை வீழ்த்தெனத் தாரைகள்
உள்ளி யுள்ள வெல்லாமுவந்தீயுமவ்
வள்ளி யோரின் வழங்கின மேகமே.''

—ஆற்றுப்படலம்.

மழை பெய்தல் இயற்கை நிகழ்ச்சி. உள்ளி உதவும் உயிருணர்ச்சி அதற்கு இல்லை. ஆதலால், அவ்வுணர்ச்சியை யுடைய வள்ளியோரின் உயர்வை கவி இங்ஙனம் உணர வைத்திருக்கிறார். மேகம் வெண்மாரி பெய்யும். வள்ளல்கள் பொன்மாரி பொழிவர். ஆறு பயிர்களை வளர்க்கும். இவர் உயிர்களை வளர்ப்பர். அது இடி முதலிய கொடுமைகளுடன் கூடியிருக்கும். இவர் ஈகை, இன்சொல் முதலிய நலன்களை எங்கும் இனிய நீராய் இதம் புரிந்து நிற்பர். அது பெயல் மாறும். இவர் செயல் மாறார்.

நிலையில்லாத செல்வம் தம் கையில் நிலைத்துள்ள போழ்தே, நிலையான புகழ் புண்ணியங்களை அடைந்து கொள்ள வேண்டும் என்று நினைந்து, விரைந்து, ஈதலைச் செய்க என நினை வூட்டி, அறிவூட்டி, நெறிகாட்டுகின்றது. உலகம் நலமுற, நீரை உதவிய மேகம் வானில் உயர்ந்து நிற்றல் போல் உயிர்கள் இன்புற உதவியருள்பவர் சிறந்த பதவியடைந்து மேலே உயர்ந்து போவர். கார் மேகங்கள் வள்ளல்கள் என வழங்கி வந்தன. வழங்க இல்லாதபோது அவர் உள்ளம் நாணி உருமாறியது போல், அவை நிறமாறி வெளுத்துப் போயின என்பதை எடுத்துக் காட்டுகின்றார் கவி. நீர்ப்பெருக்கு மிகவும் அதிகமாயிருந்த படியால் புகழ் எனத் தானம் என நீத்தம் தழைத்தது என்று புகழும் மானமும் உயர்ந்த பண்புச் சிகரங்கள் என்றும், அரசர்கள் அவைகளைப் போற்றி வரவேண்டும் என்றும் உணர்த்துகிறார். ஞான நலம் வாய்ந்த நல்ல வேதியர் கையில் ஈந்த தானம் போலவும் வெள்ளம் பெருகியது என்றது அப்பெருக்கின் நிலையைத் தெரிவிக்கிறது: உதவிப் பொருள் சிறிய தேயாயினும், அதனைப் பெற்றுக் கொண்ட பாத்திரத்தின் மகிமையால் பலன் பெரிதாவது போல், பலவாறு சிதறி விழுந்த சிறு துளிகள் ஒரு முகமாய் நதியில் வந்து கூடிய பொழுது நீர்ப்பெருக்கு நிமிர்ந்து பொங்கியது.

ஆழ்வார் கோயில்-யாதமரி (ஆ.பி.)
திரு. ஏ. குருமூர்த்தி-திருப்பதி.



''மானம் நேர்ந்தறம் நோக்கி மனு நெறி போன தண்குடைவேந்தன் புகழெனா, ஞான முன்னிய நான் மறையாளர் கைத்தானம் எனத் தழைத்தது'' என்று சரயூ நதியின் வெள்ளப் பிரவாகத்தை உணர்த்துகிறார் கவிஞர் பெருமான்: இமயமலைச்சாரலிலுள்ள மானஸரஸின் தொடரில் இருந்து வரும் இந்த சரயூ, நிறைந்த நீர்ப்பெருக்குடன் அயோத்தி நகருக்கு அருகே வடபுறமாய் வளைந்து, கிழக்கு முகமாய் படர்ந்து, அதன்பின் தென் திசை நோக்கித் திரும்பி, தென்கீழ்த் திசையில் புண்ணிய கங்கையுடன் கலக்கின்றது. அச்சங்கமத்துறை அக்காலத்தில் ஒரு சிறந்த புண்ணியத்தலமாய் பாராட்டப் பெற்றது. அதற்கு இராமகங்கை என்ற ஒரு பெயருமுண்டு. கோசல நாட்டிற்கே, உயிராதாரமாய் உறவு கொண்டமையால் கம்பர் பெருமான் இந்த ஜீவநதியைப் பாடினது வியப்பில்லை. கடவுள் வாழ்த்துப் போல், வான் சிறப்புக் கூறல் மங்கல வழக்கமாதலால், அவ் வான் வழிவந்த நீர்ச்சிறப்பு இச்சரயூ நதியின் மூலம் விளங்க வைக்கிறார் கம்ப நாட்டாழ்வார்.

உப்புக்கச்சிக்கிடக்கின்ற கடல், நீர் மேகத்தின் வாய்ப்பட்டவுடன் உவர் நீங்கி எவர்க்கும் இனிய நீராதல் போல், இழிந்த உலோபியரிடம் குவிந்துகிடக்கும் பொருள் உயர்ந்த ஞானியரிடம் அகப்பட்டவுடன் புனிதமாய் எல்லார்க்கும் பயன்படுவது போல் இதனை விளக்குகிறார்.

திரு. கே. வி. ராஜன்,
மதுரை.

'' இரவி தன்குலத் தெண்ணில்பல் வேந்தர்தம்
பரவு நல்லொழுக்கின்படி பூண்டது
சரயூ என்பது தாய்முலை அன்னதிவ்
வரவு நீர்நிலத்தோங்கும் உயிர்க்கெலாம்''

—ஆற்றுப்படலம்.

சூரிய குலத்து அரசரது நல்லொழுக்கம் போல் சரயூ நதியின் நீர் என்றும் மாறாது ஒழுகி வந்தது என்பதாம். மனு, மாந்தாதா, முசுகுந்தன், அரிச்சந்திரன், பகீரதன், திலீபன், சிபி, சுகு, ரகு, அசன் முதலிய திசை மெச்சிய மன்னர்கள் பலர் அக்குலத்தில் தோன்றி வந்தமையால் எண்ணில் பல வேந்தர் என்கிறார்.

இதனால் கோசல நாட்டின் நிதி நிலையும், நெறிமுறையும், அறநலமும், குலமரபும், நீர், நிலவளங்களும் தெரிய வருகின்றன. தாய் முலை பெற்ற பிள்ளையை மட்டும் பேணும். நதி நீர் உலகத்தில் உள்ள பல வகை உயிர்களுக்கும் உதவும். இதனால்

சரயூ நதியின் பான்மையும் மேன்மையும் இனிது புலப்படுத்தும் கம்பர் வெள்ளம் கடல் கலந்த காட்சியை பின்வருமாறு வருணிக்கிறார்.

'' கல்லிடைப் பிறந்து போந்து கடலி
டைக் கலந்த நீத்தம்
எல்லேயின் மறைகளாலும் இயம்பரும்
பொருளீதென்னத்
தொல்லேயின் ஒன்றேயாகித் துறை
தோறும் பரந்த சூழ்ச்சி
பல்பெருஞ் சமயம் சொல்லும்
பொருளும் போல் பரந்ததன்றே.''
—ஆற்றுப்படலம்.

விநயமாய் எடுத்து உணர்த்தும் பாங்கு கம்பனுட்டாழ்வாரின் தனிச் சிறப்பு. கடவுள் ஒன்றே. அப்பரம் பொருளை இடங்கள் தோறும் பிரித்துப் பார்க்கும் மானிடர்கள் தத்தம் இடம், கலை, காலம் முதலியவற்றிற்கு ஏற்ப வேறு வேறு பெயரால் வழங்கிக் கொண்டு மதம் பலமீறி மாறுபட்டிருக்கின்றார்கள். மலையில் தோன்றிய வெள்ளம் திரண்டு வருங்கால் அருவி யென வருகின்றது. நதியில் ஆற்று நீராகவும், கால்வாயில் வாய்க்காலாகவும் கடலில் கலக்கும் பொழுது ஆழியெனவும் பெயர் பெறுகின்றது. இதே போல், ஒரே கடவுள் மானுட பேதத்தால் பல நாமங்களைத் தாங்குகின்றார். பரம்பொருளின் பரிபூரண நிலையை அறிந்து கொண்டவர் வரம்பு கண்டு வாதாட மாட்டார்கள். அறியாதவரோ, தாம் கண்டதையே பெரிதாகக் கருதிக் கொண்டு வாதாடி நிற்பர். அந்நிலையை நெடிது கத்தும் கிணற்றுத் தவளைக்கு ஒப்பிட்டுக் கூறுகிறார் கவிஞர்:

நீர்ப்பரப்போடு கடவுட் பரப்பை ஒப்பவைத்து கம்பர் இதில் ஒரு சிறந்த தத்துவக் காட்சியை விளக்கியிருக்கிறார். நீர் நிலைகளைக் கண்டு நீரினை அரும் உயிர்கள் அருந்தி ஆறுதல் அடைவதுபோல், நாமும் சார்ந்த சமயங்களில் தேர்ந்த தெய்வம் பேணி மக்கள் சீர்பெற வேண்டுமேயன்றி உயர்வு தாழ்வு கூறி மதியிழக்கக் கூடாது என்று விளக்குகிறார். பாரிலுள்ள நீர் நிலைகள் எல்லாம் நேரே நிரப்பி அவற்றுள் அடங்காமல் நெடுங் கடலாய் நீத்தம் நிமிர்ந்துள்ளது போல், தோன்றி சமயங்களிலெல்லாம் தோய்ந்து அவற்றுள் அமையாமல் பரம்பொருள் பொங்கிப் பரந்து எங்கும் பூரணமாய் விரிந்து நிறைந்துள்ளது என்பது கருத்து. ஒரே பரம் பொருளை, வைணவர் திருமால் என்றும், சைவர் சிவம் என்றும், கௌமாரர் குமரன் என்றும் கூறுவது போல் வேறு வேறு கூறினும், மூல முதல் பொருள் ஒன்றே என்பதை நன்கு சுட்டிக் காட்டுகிறார்.

இக்கம்பனுட்டாழ்வாரின் கருத்தை கருத்தில் வைத்துக்கொண்டு பரஞ்சோதி முனிவரும் தம் நூலில் சமயச் சார்புடன் வேறு வகையில் உணர்த்துகிறார். கோசல நாட்டிற்கு அழகும் வளமும் அருளி, என்றும் பெருமை குன்றாது சீர்மையுடன் நிலவிவுள்ள இனிய சரயூ நதியைக் கூறுமுகத்தால் அரிய பல உறுதி நலன்களைக் கம்பர் பெருமான் இதில் உணர்த்துகிறார்.

ஈகை, இரக்கம், மானம், ஞானம், தானம், தவம், நீதி, வீரம் முதலிய உயரியப்பண்புகளையும், தெய்வச்சிந்தனையையும், எவருக்கும் உயர்வைத் தருகின்ற சிறந்த தத்துவங்களையும் இதன் கண் அமைத்து வைத்துள்ளார் கம்பர் பெருமான். 

# திருவேங்கடவனின் திருவருள் தேவி



திரு. எஸ். வி. ராமசுவாமி,
செகந்திராபாத்

ஜனன மரணமாகிய சுழலில் ஒவ்வொரு ஆன்மாவும் சிக்கி இதற்குக் காரணமான ஸம்ஸாரம் என்னும் பெருங்கடலில் மூழ்கித் தத்தளிக்கின்றது.

''என்ன பார்த்துக் கொண்டிருக்கின்றீரே. ஒரு கை கொடுத்து இவனைக் காப்பாற்றுங்கள்!'' என எம்பெருமான் திருவுள்ளத்தில் தயா தேவி தூண்டுகின்றாள். எனவேதான் சாஸ்த்ரங்கள் என்ற கையை நீட்டுகின்றான்.

அந்த சாஸ்த்திரங்களின் ஸாரம் ஞானமே ''ப்ரஜ்ஞாஸாரம்''

அவை ப்ரணவத்தின் அடிப்படையில் எழுகின்றன. எனவே வலுவானவை. ''ப்ரக்ருதி மஹதா மூல பாகேந ஜுஷ்டம்''.

கைகளில் பிடிப்பதற்காக விரல்கள் போல் வேதமாகிய சாஸ்த்ரங்களில் ரிக், எஜுர், ஸாம மென்ற பல சாகைகள் உள.

''சாகா பேதை:''

நிச்சயமாக காப்பாற்றவல்ல அக்கைகள் குற்றமற்றவை, அழகானவை, என்றும் இருப்பவை. ''ஸுபகம் அநகம் சாச்வதம்''

இந்த ஸ்ரீனிவாஸனுடைய கை (சாஸ்த்திரங்கள்) எதனைச் சுட்டிக் காட்டுகின்றன. அவன் திருவடிகளையே. இது ''புரியாத பல வேதங்களை பயில முடியாது தடுமாறும் நீ என் திருவடியை அடைக'' என்று ''மாமேகம் சரணம் வ்ரஜா'' என்று சொல்லாமல் சொல்லவில்லையா?

இவையனைத்துக்கும் காரணம் அவன் உள்ளத்தில் நடனமிடும் தயா தேவியே என்று பேசுவான் கவி.

இந்த ஸ்லோகத்தில் ''எல்லா மக்களும் எளிதில் பயின்று பயன்பெற ஜ்ஞான பாகமான ஸாமவேதத்தின் ஸாரமான திருவாய்மொழியை தமிழில் நம்மாழ்வாரைக் கொண்டு எம்பெருமான் தோற்றுவித்ததும் தயா தேவியின் தூண்டுதலே'' என்ற உட்பொருள் காண்பர் சில அறிஞர்.

''ப்ரேமே நித்யம் பவஜலநிதௌ மஜ்ஜதாம்மாநவாநாம்
ஆலம்பார்த்தம் வ்ருஷகிரிபதிஸ்த்வந்நிதேசாத் ப்ரயுங்க்தே
ப்ரஜ்ஞாஸாரம் ப்ரக்ருதி மஹதா மூல பாகேந ஜுஷ்டம்
சாகாபேதை: ஸுபகமநகம் சாச்வதம் சாஸ்த்ரபாணிம்'' 46

தத்வம் அறிந்த ஞானிகளை அண்டி வணங்கி, பணிவிடைகள் செய்து நமது அஜ்ஞானங்களையும் மனக்கலக்கங்களையும் போக்கிக் கொள்ள பகவத்கீதை நியமிக்கின்றது. ''தத் வித்தி ப்ரணிபாதேந பரிப்ருச்யேந ஸேவையா|| உபதேக்ஷ்யந்தி தே ஞானம், ஞாநின: தத்வதர்சின:''

இதனைக் கலங்கிய நீரைத் தேத்தாங் கொட்டையைப் போட்டு தெளிய வைப்பதற்கு ஒப்பிடுகிறான் கவிஞன்.

இப்படித் தெளிந்தவர்களுக்கே உண்மையான (ஸ்வசாஸ்த்ரம்) தன் சாஸ்த்திரத்தைக் காட்டுகிறான்.

அவனுடைய சாஸ்த்திரம் எது?

அதுதான் அவன்பால் குடிகொண்டுள்ள தயை என்னும் அஸாதாரணமான குணம்-தயா தேவி.

''ப்ரும்மம் குணமற்றது'' 'அது ஒன்றே. மற்ற எல்லாம் பொய்'' ''ஈச்வரன் என்ற ஒரு ஜகத்காரணத்துக்கு இடமேயில்லை, எல்லாம் நியதியே'' என்பன போன்ற பல வேதாந்தங்களையும் சாஸ்த்திரங்களின் மேற்கோள்காட்டிப் பேசுகின்றார்களே அப்படிப்பட்ட மாயா சாஸ்த்திரங்களும் திருவேங்கடவன் திருவுள்ளத் தெழுந்தனவா?

ஆம். நம் தயா தேவி சிறிது ஓய்வெடுத்துக் கொண்டு அவன் திருவுள்ளத்தினின்றும் சற்று விலகும்போது

அவன் இந்த மாயா சாஸ்த்திரங்களுடன் கொஞ்சி விளையாடுகின்றான் ("லாளயன் விப்ரலிப்ஸாம்")

இப்படி மாயா சாஸ்த்திரங்களோடு விளையாடலாமா? ஏன் விளையாடுகின்றான்?

மற்றொன்றும் அறியாது கேவலம் வேங்கடவன் தயையே நாடி அவனைச் சரண்புகும் ப்ரபந்நர்களுக்கு இவ் வேதாந்தங்களெல்லாம் எதிரிகளல்லவா? "த்வத் ப்ரபந்ந ப்ரதீபான்"

விளையாடித் தன்னுள்ளத்துள் தயாதேவி புகுவதன் முன் அவ்வெதிரிகளை அடக்கிவிடுகின்றான். 'தமயிதும்'

இந்த ஸ்லோகத்தில் "முரண்பாடுகள் காணும் வேதாந்தங்களெல்லாம் கற்று இறைவனைத் தேடிக் கைசோர்ந்தவர்க்குத் தன்னுள்ளத்து தயாதேவியை நாடித் தன்னைச் சரண் புகும் மஹான்களே உண்மையான தெளிந்த ஞானவான்கள்" என்ற முடிவை இப்படி அழகாகக் கவிஞன் பேசுகின்றான்.

"வித்வத்ஸேவா கதக நிகஷைர்வீத
பங்காசயாநாம்
பத்மாகாந்தஃ ப்ரணயதி தயே
தர்ப்பணம் தே ஸ்வசாஸ்த்ரம்
லீலாதக்ஷாம் த்வதநவஸரே
லாலயந் விப்ரலிப்ஸாம்
மாயா சாஸ்த்ராண்யபி தமயிதும்
த்வத்ப்ரபந்ந ப்ரதீபாந்" 47

இந்த தயா தேவியுடன் என்றுமே ஒரு தோழி உண்டு. இவள் புலப்படும்போதெல்லாம் அத்தோழியும் உடன் வருவாள். யார் அந்தத் தோழி? அவள்தான் ஸ்ரீனிவாஸனுடைய (கடாக்ஷம்) அருள்நோக்கு. அவனுக்கு இயற்கைத் துணைவியான தயை உள்ளத்தில் ஊற்றெடுக்கும்போதெல்லாம் அவனுடைய குளிர்ந்த கடாக்ஷம் வெளிப்படும்.

மக்கள் மோக்ஷ பர்யந்தமாக உள்ள எல்லாப் பெருமைகளையும் அடைய இக்கடாக்ஷம் ஒன்றே போதும்.

தயையே, நீ தோன்றுவதால் வெளியாகும் ஸ்ரீனிவாஸனுடைய கடாக்ஷம் ஒரு மஹாபாபியின் மேல்கூட விழுந்தாலும் அதன் விளைவு என்ன தெரியுமா ?

"ஜாயமானம்ஹி கடாக்ஷம் யம் பஸ்
சேத் மதுஸூதனஃ
ஸாத்விக ஸ்ஸது விஜ்ஞேயு ஸவை
மோக்ஷார்த்த சித்தகஃ"

உடனே அவனுக்கு நல்ல ஸத்துக்கள் சேர்க்கையும்' ஓர் ஸதாசார்ய அனுக்ரஹமும் கிட்டிவிடுகின்றது. அவ்வளவே. அவன் சாச்வதமான

(32-ம் பக்கம் பார்க்க)

# அபிராமி அந்தாதி

திருமதி. ராஜலக்ஷ்மி பரமேச்வரன், பெங்களூர்.

### ராகம்—நாட்டை

உதிக்கின்ற செங்கதிர்போல் ஒளிமிக நிறைந்தவளே
சந்திரோதயம் போலவே சௌந்தர்யம் மிக நிறைந்தவளே (உ)

மாணிக்க வீணையைக்கொண்டு மணிபுரத்தில் வசிப்பவளே
ஸ்ரீபுரத்தில் சிவனுடன் அமர்ந்திட்ட தேவியே ஜெய ஜெயா (உ)

கதம்பவனத்திலே கோகில கானம் செய்யும் குயிலே
கற்பக சோலையிலே மயில்போலே ஆடிடும் மயிலே (உ)

கள்ள வாரணப் பிள்ளையாரின் தாயும் நீயே
மயிலேறும் முருகன்தாயே மணிகண்ட மூர்த்தியின் தாயே
ஜெய ஜெயா (உ)

### ராகம்—கௌளை

தியானம் செய் மனமே நம்
அபிராமி தேவியை தினம் (தி)

தியானம் செய் மனமே தினமே
நம் அபிராமி அன்னையின்
தியானமே சௌந்தர்யமே
சகல சௌபாக்கிய வைபோகமே (தி)

தேவியின் அருள்கிடைக்க தியானம் செய்மனமே
சிரம் குனிந்து பணிந்திடு அவள் பாதத்தை மனமே
பக்தியும் கொடுப்பாள் பரகதியும் கொடுப்பாள்
முக்தியும் கொடுப்பாள் சிவசக்தி ராஜேஸ்வரியை தினம் (தி)

### ராகம்—ஆரபி

ஸ்ரீசக்ர நாயகியே எங்கள் அன்னை அபிராமியே
ஸ்ரீ தசரத ராமனின் ஸகோதரியே (ஸ்ரீ)

ஸ்ரீபுரத்தில் வசித்திடும் லலிதாம்பிகையே
சிந்தாமணி கிருஹத்தில் கொலுவு கொண்ட அன்னையே
அபிராமியே (ஸ்ரீ)

மாசி மகத்திரு நாளான பூர்ணிமையில் உதித்ததாயே
பங்குனி உத்திரத்திரு நாள்கொண்ட ஸ்வாமி நாதன் தாயே
மகரவிளக்கு ஜோதியான மணிகண்டனின் தாயே
சித்திபுத்தியை மணந்துகொண்ட சித்தி விநாயகன் தாயே (ஸ்ரீ)



# ஸ்ரீ அரவிந்தரும் கீதையும்

திரு. ஏ. தியாகராஜன், பூனா.

பகவத் கீதை வேதாந்தத்தின் சார மாகவும் அதன் வளர்ச்சியின் பல அம்சங்களை ஒன்றுபடுத்திய கூட்டாக வும் அமைந்துள்ளது என்பது அனை வரும் அறிந்ததே.

மாபாரதத்தின் ஒரு காண்டமாக விளங்கும் கீதை அம்மாபெரும் காவி யத்தின் கருவாகவும் அரிய கடவுள் தத்துவத்தின் கனியாகவும் உள்ளது. நாடகக்களம் குருக்ஷேத்ரம். அதாவது வாழ்க்கை யென்னும் போர்க்களம். அதில் அறிவுரை தரும் அண்ணல் ஞானத்தின் ஞானமான இறைவனே—அதுவும் மனித வடிவில் ஓர் அவதார மாக. அறிவுரை கேட்டு நிற்கும் அவனும் சாதாரணன் அல்லன்-அவன் இறை நோக்கி எழுகின்ற இவ்வுலக ஆன்மீக வேண்டுதலின் பிரதிநிதி, மானுடத்தின் தூதுவன். பிரச்னையும் லேசானது அல்ல-பல்வேறு வகைப் பட்ட இழுப்புகட்கு ஆட்பட்ட மனித ஆன்மாவின் குழப்பம். ஒன்றும் புரி யாது, மனித அறிவும் ஆற்றலும் அளக்க வொண்ணு நிலையில் ''நீயே சரண்'' என்று மண்டியிட்டு ஸ்ரீ கிருஷ் ணன் முன்பு வேண்டி நிற்கிறுன் அர்ஜுனன். வாழ்வு என்பது என்ன? இந்த வாழ்வின் ஆர்ப்பாட்டமெல் லாம் எங்கு செல்கின்றன? மனிதன் யார்? ஏன் அவன் இவ்வாறு விரட்டப் படுகிறுன்? எங்கு? அவனுக்கு என்று ஒரு இடம் உண்டா? எது அது?

என்னல் படைக்கப்பட்டது இந்த உலகம், என்று கூறுகிறுன் இறைவன். அவனது படைப்பான இவ்வுலகில் அவனே வந்து, ஒவ்வொரு வடிவமாக வும் ஆகி, ஒவ்வொரு உயிரின் உள்ளும் உறைபவனுகவும் உவக்கிறுன் கடவுள். ஒரு பெரும் இயந்திரத்தில் உள்ளது போல் அவனது சக்தியாலேயே எல்லா உயிர்களும் அவற்றின் நிலைகளும் ஆட்டங்களும் ஆளப்படுகின்றன. அவனது இந்த ஆளுமையே, அவனது இங்கு வந்து வசிக்கும் உண்மையே, அவன் கண்காணிக்கும் கருணையே இவ்வுலக வாழ்விற்கு ஒரு ஆன்மீக முக்கியத்துவத்தையும் உண்மையையும் தருகின்றன.

கோடிக் கணக்கான ஜீவராசிகளின் அசைவுகளின் அடிப்படையில் ஒரு பெரும் உண்மை உறைந்துள்ளது. அது இறைவனது—பரவிநிற்கும் உண்மை.

மேல் தோற்றத்தினின்றும் சற்று ஆழ்ந்து நோக்க தெளிவது வாழ்வின் அர்த்தம். பிறந்து—இல்லை பிறப் பிக்கப்பட்டு, வாழ்ந்து, சாவின் வழி இழுக்கப்பட்டு, இன்பம் துன்பம், நம்பிக்கை வெறுப்பு இவற்றின் பாதை யில் காற்றில் அலைக்கழியும் ஓர் இலை யெனச் செல்வது அல்ல வாழ்வின் நோக்கம். அவ்வாறு இருப்பது இரு ளின் ஆட்சிமை. மனிதன் உணர வேண்டியது சாதாரண 'நான்'-ஐவிட பெரிய உண்மையும் சக்தியும் உண் டென்பது. பார்க்கப் போனல் பல வித சக்திகளும், ஜீவராசிகளும் உள்ள இவ்வுலகமே இறைவன் வெளிப்பாடு—இவையெல்லாம் அவனுடையவை—இவற்றிலெல்லாம் அவன் வாழ்கிறுன். அவன் எல்லாமாகவும் உள்ளான்: மனிதனுக்கு வேண்டியதெல்லாம் ஆழ்ந்தநம்பிக்கை(faith), ஆர்வம் (aspiration) இடைவிடா முயற்சி இவையே. இதை எவ்வாறு செய்வது—கீதை சொல்கிறது. இதைச் செய்வது வாழ்க் கையைவிட்டு அதன் செயற்பாடுகளை விட்டு ஓடிவிடுவதன் அல்லது துறப் பதன் மூலம் அல்ல: ஆனல், மிகவும் இயற்கையான வழியான, வாழ்வின் நோக்கினையும் இறைவனின் உள்வதி யும் உண்மையினையும் உணர்ந்து வெளிப்படச் செய்யும் வழியின்மூலமே. இதைச் செய்ய கீதை சில வழிமுறை களைக் கூறுகிறது. அவ்வழி முறைகள் பல்வேறு விதமான மனித இயல்புகளை யும் அவற்றின் நூறு நூறு அம்சங் களையும் கணக்கில் கொண்டு வகுக்கப் பட்ட உன்னத முறைகளாகும்.

இறைவனல் அளிக்கப்பட்டது என்று எண்ணிச்செய்யவேண்டிய வேலையினைச் செய்ய வேண்டியது. அனைத்துலகின் அரசனை அவனுக்கே உன் வேலை களின் பலன்களை அர்ப்பணி. ஆசை யினை விட்டொழி. சமதையினை அடையும் முயற்சி கொள். வேலை களின் மேல் ஆசை கொள்ளாதே: அவ்வேலைகளின் விளைவுகளைப்பற்றி யும் எண்ணமின்றி இரு. இதுவே இறைப்பணியாகும்.

மெல்லமெல்ல செய்வோன் என் பதன் மாயை விலக ஆரம்பிக்கும். ஒரு மாபெரும் சக்தியே எல்லாம் செய்கிறது—தனக்கு வேண்டியவற்றை யாராவது ஒருவனை கருவியாகக் கொண்டு செய்கிறது என்பதை உணரு வாய். நீ ஒரு கால்வாய் மட்டுமே, ஒரு கருவி மட்டுமே என்று புரிந்து கொள்வாய். பொதுவாக இவ்வேலை யில் நீ விரும்பினல் இறைவன் கருவி என்ற உணர்வில் ஆர்வமுடன் செயற் படலாம். சரண் அடைய கற்றுக் கொள். உன் நோக்கினை இறை நோக்கோடு இணைக்க முற்படு. எங் கும் பரவி நிற்கும் இறை உணர்வினை வெளிப்படுத்தும் radiator ஆக முற் படு. எங்கும் நிறையும் அவனது சக்தி ஞானம் இவற்றினை நீ உணர்ந்து அவற்றேடு ஒன்றிநில்—இதுவே ஞானத் தின் வழியாகும்.

ஆயின் இவ்வுணர்வு, அந்த பேருணர்வு, தன்னை பெருஞ்சக்தியாக வெளிப்படுத்தும் போதே முழுமை பெறுகிறது. அவ்வுணர்வின் நாயகன் இப்போது உன்னை ஆள்கிறுன்: உன் எல்லா சக்திகளும் அசைவுகளும் ஆன் மாவின் ஆர்வமும் அவனை நோக்கியே நடை பயில்கின்றன. உன்னை முழுமை யாக அவனேடு இரண்டற ஒன்ருக ஒன்றும்படி ஒப்புவிக்க வேண்டியது தர்மம் மட்டுமல்ல—பேரன்பு:

அன்பின் வழியே அந்த வழி. புனிதப்படுத்தப்பட்ட உனது ஆர்வமும் ஞானத்தில் தெளிந்த மனமும் இப்போது அன்பெனும் ஊற்றுகளில்—சரணமென்று சாற்றும் நல்லி தயங்களிலெழும் அமுத ஆற்றில் மூங்கியெழும். நீ அவனில் வாழ்கிறுய்; அவனில் உவக்கிறுய்; அவனது லீலேயில் ஆடுகிறுய்.

பூமியின், வானின் அம்சங்களே ஒருங்கிணேக்க உள் ஆன்மிக உணர்வும் வெளிப்படும் செயல்களின் கூட்டும் ஒன்றை ஒன்று சார்ந்தும் வளப்படுத்தியும் முற்படவேண்டும். இது மனிதனின் உண்மை நிலேயை உலகில் வெளிப்படுத்தும்-இதுவே கீதாசாரியனின் உபதேசத்தின் மையக்கருத்தாகும். அவன் ஆங்காங்கே அள்ளித் தெளித்துள்ள ரத்தினங்கள் பல உள்ளன. ஆனல் நாம் ஸ்ரீ அரவிந்தர் நோக்கில் கீதையின் மையக்கருத்திஜன மட்டுமே இங்கு மிகவும்சுருக்கமாகக் கண்டோம்.

---

(30-ம் பக்கத் தொடர்ச்சி)

மோக்ஷ ஆனந்தத்தில் இச்சை கொள்கிறுன். இந்த உலகத்தில் இச்சரீரத்துடன் இருக்கும்போதே தேவ யஜ்ஞம் பிதுர் யஜ்ஞம், போன்ற பஞ்ச மஹா யஜ்ஞங்களேச் செய்து பரிசுத்தம் பெற்றவன்போல் மிகத் தூய்மையுடையவனுய்த் திகழ்ந்து ஸ்ரீனிவாஸனே புகலிடம் என்று தெளிந்து அவனேச் சரணடைகின்றுன். விளேவு?

இச்சரீரத்தைவிட்டு மேலுலகம் செல்லும்போது ப்ரும்மா முதலான எல்லா தேவர்களும் அவனே வரவேற்று உபசரித்து காணிக்கைகளும் செலுத்துகின்றனர்.

இவ்வளவு வைபவங்களேயும் ஒரு சாதாரண பாபியும்கூட ஸ்ரீனிவாஸன் உள்ளத்தில் நீ குடிகொள்வதால் அடைகின்றுன் எனில் உன் பெருமையை என்னென்று பேசுவது !

''ச்ரேயஸ் ஸூதிம் ஸக்ருதபி தயே
ஸம்மதாம் யஸ்ஸகீம் தே
சிதோதாராமலபத ஜநஃ
ஸ்ரீநிவாஸஸ்ய த்ருஷ்டிம்
தேவாதிநாமயமந்ருணதாம் தே
ஹவத்வேமி விந்தந்
பந்தாந்முக்தோ பலிபிரநகைஃ
பூர்யதே தத்ப்ரயுக்தைஃ'' 49

இப்படி தயாதேவியின் அருள் பெற்று சிறப்புற்றவர் யாரேனுமுளரா? அடுத்த ஸ்லோகத்தில் விடை வருகிறது.

இப்படி திருவேங்கடவன் குளிர்ந்த கடாக்ஷத்தைப் பெற்ற ஒரு சேதனனுக்கு தயா தேவியே ஓர் உயர்ந்த ஆசார்யனுய் தோன்றிவிடுகிறுள். (த்வயா பாங்கம் யேஷ ஸத்தேசிகாத்மா).

தோன்றி என்ன செய்கிறுய்?

அவன் உள்ளத்தில் தெளிவை உண்டுபண்ணுகிறுய்.

என்ன தெளிவு?

எவ்வளவு பாபியாயினும் தன் குற்றங்களே உணர்ந்து திருவேங்கடமுடையானேச் சரணமென்றடைந்து முன் ஸ்லோகத்தில் பேசிய சிறப்புக்களே யெல்லாம் அடையலாம் என்ற தெளிவு.

ஆமாம். இப்படி யாராவது அருள் பெற்றவர்கள் உண்டா?

ஏனில்லே. மஹா பாபியான க்ஷத்ர பந்துவைப்பற்றிக் கேட்டதில்லேயா ? ''மொய்த்த வல்வினேயுள் நின்ற, மூன்றெழுத்துடைய பேரால்—கத்திர பந்துமன்றே பராங்கதி கண்டு கொண்டான்.'' என்ற ஆழ்வார் பேச்சுக் கேட்டதில்லேயா?

தயா தேவி, இப்படி போக்கற்று அவல நிலேயில் இருப்பவர்களுக்கு ஏன் இரங்கவேண்டும் ?

ஒரு தாய் தன் மக்களுள் எவன் அசடோ, வலியற்றவனே, படிப்பில்லாதவனே அந்தப் பிள்ளேக்குத்தானே மிகப் பரிவுடன் பலவித உதவிகளும் செய்கிறுள். அப்படி நீ உன்மக்களேக் காப்பாற்றுகிறுய் என நினேக்கிறேன்.

''மாதா, ஜட இவஸூதே (மாத்ருசே=என்னேப்போன்ற) வத்ஸலாம்'' என்று தன்னே ஒரு தயா தேவியின் அசட்டுப் பிள்ளேயாகப் பேசும் இக் கவிச்சொற்களே இந்த ஸ்லோகம்.

''திவ்யாபாங்கம் திசஸி கருணே
யேஷு ஸத்தேசிகாத்மா
க்ஷிப்ரம் ப்ராப்தா வ்ருஷகிரிபதிம்
க்ஷத்ரபந்த்வாதயஸ் தே
விச்வாஸார்யா விதி சிவ முகா ஸ்வாதி
காரோபருத்தா
மந்யே மாதா ஜட இவஸூதே
வத்ஸலா மாத்ருசே த்வம்'' 50

(தொடரும்)

---

# அறிவிப்பு

சந்தாதாரர்கள் தங்களுடைய சந்தாத் தொகையினே ஒவ்வொரு மாதத்தின் 15ஆம் தேதிக்குள் 'மார்க்கெடிங் ஆபீஸர், பப்ளிகேஷன் செக்ஷன், தி. தி. தேவஸ்தானம் பிரஸ் காம்பௌண்டு, திருப்பதி' என்ற முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். அப்போதுதான் அவர்களுக்கு அடுத்த மாதத்திலிருந்து 'ஸப்தகிரி' பத்திரிகையைத் தொடர்ந்து அனுப்ப ஏதுவாக இருக்கும். இருப்பில் பிரதிகள் இருப்பின் அம்மாதத்திலிருந்து (பணம் அனுப்பும் மாதத்திலிருந்து) ஸப்தகிரி பத்திரிகைகள் அனுப்பி வைக்கப்படும். எம். ஓ. கூப்பனில் புதிய சந்தாதாரர்கள் எந்த மாதத்திலிருந்து பத்திரிகை வேண்டும் என்பதைத் தெளிவாக எழுதுதல் வேண்டும். தொடர்ந்து தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளும் சந்தாதாரர்கள் மறக்காமல் எம். ஓ. கூப்பனில் தங்கள் சந்தா எண்ணே குறித்தல் வேண்டும். ஸப்தகிரி மற்றும் தேவஸ்தான வெளியீடுகளுக்கான தொகையினே 'மார்க்கெடிங் ஆபீஸர், தி. தி. தேவஸ்தானம் பிரஸ் காம்பௌண்டு, திருப்பதி' என்ற முகவரிக்கு அனுப்புதல் அவசியம்.

# அனுமன் கதை

## 21. சோபனம் சொன்னான்.

ஏழை சோபனம் ஏந்திழை சோபனம்
வாழி சோபனம் மங்கல சோபனம்
ஆழி யான அரக்கனை ஆரியச்
சூழி யானை துகைத்தது சோபனம்.

*(17, மீட்சிப்படலம், யுத்தகாண்டம்.)*

அனுமன் கொண்டு வந்த சஞ்சீவி மலையால் அனைவரும் உயிர்பெற்றெழுந்த பின், சாம்பவான் அனுமனை நோக்கிக் கூறலானான்:

''அளவற்ற ஆற்றலுடையவனே! நீ கொண்டு வந்த மருந்துமலை உயிரிழந்தோரை மீண்டும் உயிர் பெற்றெழச் செய்யவல்லது. அது இங்கேயே இருக்குமாயின், அதனால் பகைவர்க்கும் நன்மை விளையும். எனவே, இம்மலையை முன்பிருந்த இடத்திலேயே வைத்துவிட்டு மீண்டு வருவாயாக!''

இவ்வாறு சாம்பவான் கூறியவுடனேயே அம்மலையை எடுத்துக்கொண்டு அனுமன் போய்விட்டான்.

இந்திரசித்து செலுத்திய பிரம்மாத்திரத்தால் இராமஇலக்குவர், வானரர் அனைவரும் மாண்டனர் என்ற செய்தி கேட்டு இராவணன் மிகவும் மகிழ்ந்திருந்தான். அரக்க மகளிர் கள்ளுண்டு ஆடிப் பாடினர். இலங்கை முழுதும் மகிழ்ச்சி வெள்ளம் பெருகியது.

போர்க்களத்தில் உயிர்பெற்றெழுந்த வானர வீரர்கள் அனைவரும் முன்னிலும் மிகுந்த வலிமை கொண்டு பெரிதும் ஆர்ப்பாட்டம் செய்தனர். இராம இலக்குவர் தம் விற்களை வளைத்து நாணொலி எழுப்பினர். வானரர்களின் ஆரவாரத்தையும், இராம இலக்குவர் எழுப்பிய நாணொலியையும் கேட்டு இராவணன் திடுக்கிட்டான். அப்போது ஒற்றர்கள் வந்து போர்க்களச் செய்தியைக் கூறினர். இது கேட்டு இராவணன் தன் அமைச்சர் அவையைக் கூட்டினான். மாலியவான் என்னும் அமைச்சன், ''சீதையை விடுதலே தக்கது'' என்றான். இது கேட்டு மாலியவானை இராவணன் சீறினான்.

நிகும்பலையாகம் செய்து பகைவரை வெல்லப் போவதாக இந்திரசித்து சினந்து கூறினான். இதற்கு இராவணனும் உடன்பட்டான்.

சுக்ரீவன் யோசனையின் பேரிலும் இராமனின் அனுமதியுடனும் வானரர்கள் இலங்கையை எரித்துக் கொண்டிருந்தனர். மருந்துமலையை வைத்துவிட்டு அனுமன் அப்போது அங்கே வந்து சேர்ந்தான். வீரக்கழலையணிந்த அனுமன் இலங்கையை அடைந்ததும் ஆரவாரஞ் செய்தான். கருடனுடைய சிறகுகளின் ஒலியைக் கேட்டு நாகங்கள் நடுங்குதல் போல, அனுமனின் ஆரவாரங் கேட்டு அரக்கர்கள் நடுநடுங்கினர். அப்போது அனுமன் மேற்கு வாயிலில் இருந்தான். மாயையில் வல்லவனான இந்திரசித்து அனுமன் இருந்த இடம் வந்து சேர்ந்தான்.

சீதையைப் போன்று மாயாவடிவம் ஒன்றை அமைத்துக் கொண்டு இந்திரசித்து அங்கே வந்திருந்தான். அம்மாயா சீதையின் கூந்தலைப் பற்றியிருந்த இந்திரசித்துவின் கையில் கூரிய வாளொன்றும் இருந்தது.

''இச்சீதையினாலன்றோ போர் நிகழ்ந்தது. எனவே, இச்சீதையை வெட்டி வீழ்த்தி இவள் ஆவியைப் போக்குவேன்!'' என்று இந்திரசித்து சினந்து கூறினான். இது கேட்டு அனுமன் நடுங்கிப் போனான்.

அம்மாயா சீதையை உண்மைச் சீதையென்று அனுமன் நம்பிவிட்டான். எனவே, தன் வாழ்வே முடிந்துவிட்டதாகக் கருதி அனுமன் நாப்புலர்ந்து ஓய்ந்தான். சீதையை மீட்கும் உபாயம் ஒன்றும் புரியாததால் அனுமன் இந்திரசித்துவைப் புகழ்ந்து கூறலானான்:

''குணம் மிகுந்தவனே! குற்றமற்ற குலத்தில் பிறந்த நீ ஒப்பற்ற இச்சீதையைக் கொல்வதால் பழியையன்றோ அடைவாய். நீ பிரமதேவனின் நாலாந்தலைமுறையினைச் சேர்ந்தவன். கலைகளின் திறனையெல்லாம் நுட்பமாக நீ உணர்ந்துள்ளாய்! மாதினைக் கொல்லும் செயல் பெரும்பழியையன்றோ விளைவிக்கும்? இரக்கமின்றிச் செய்ய முற்பட்ட உன் செயல் கண்டு மண்ணுளோரும் விண்ணுளோரும் நடுங்கி நிற்கின்றனர். என் நெஞ்சமும் நடுங்குகிறது. என் பேச்சைக் கேட்டு உலகத்தார்க்காக இரக்கமுற்று நீ இச்செயலைக் கைவிட்டு விட்டால் உலகமே உன் சொற்படி நடக்கும். உன் உயர்ந்த மரபினை நன்றாக ஆராய்ந்து பார்! நீ இப்புன்மையான தொழிலைச் செய்தால் உன் புகழே அழிந்து போகும். எனவே, ஆராய்ந்து செய்யத் தக்கதைச் செய்வாயாக!''

திரு. மா. சீதாராமன், M.A., BEd.,
பெருங்கட்டூர்.

அனுமனின் இவ்வுரைகளைக் கேட்டு இந்திரசித்து கூறலானான்:

''அடா குரங்கே! இச்சீதையை வெட்டினால் தான் என் தந்தை உயிர் பிழைப்பர். எங்கள் இலங்கை நகரமும் தப்பிப் பிழைக்கும். சீதையை மீட்க வேண்டும் என்று கருதி வந்த உங்கள் எண்ணம் கைகூடாமலே போய்விட்டது. அயோத்தி நகரை அடியோடு அழித்துத் தீக்கிரை யாக்கி மீள்வதற்காகவே இப்போது நான் அயோத்தி நோக்கிச் செல்லப் போகிறேன். முடிந்தால் அயோத்தியை யாவது காப்பாற்றிக் கொள்ளுங்கள். அயோத்தியிலுள்ள பரதனும் சத்துருக்கனும் கோசலை கைகேயி சுமித்திரை

முதலானோரும் என் கையம்புக்குத் தப்ப முடியாது. நான் இந்தப் புட்பக விமான மேறி இப்போதே விரைந்து செல்வேன். என் அம்புகளிலிருந்து இராமனது தாயரும் தம்பியரும் தப்பு தல் என்பது முடியாது!''

இவ்வாறு இந்திரசித்து சினந்து கூறிக்கொண்டே அம்மாயா சீதையை வெட்டி வீழ்த்தினான். பின், புட்பக விமான மேறி வடதிசை நோக்கிப் புறப்பட்டான். இவ்வளவில், அனு மன் மனமொடிந்து உயிரொடுங்கி மலைபோல் தரைமேல் சாய்ந்தான்.

அயோத்தி போவது போலப் போக்குக் காட்டிவிட்டு, இந்திரசித்து நிகும்பலை சென்று பகைவரையழிக்க யாகஞ் செய்யத் தொடங்கினான்.

மாயாசீதையை உண்மைச் சீதை யென்று நம்பிய அனுமன் அம்மாயா சீதையை இந்திரசித்து வெட்டியது குறித்துப் பெரிதும் புலம்பினான்.

''பெண் குலத்திற்குப் பெருமை சேர்க்கும் அணிகலம் போன்றவரே! என் அம்மையே! உன்னை வெட்டியது கண்டும் என் நெஞ்சும் உயிரும் இன்ன மும் பின்னம் ஆகாமலே இருக்கின் றதே! ஐயோ! என்ன செய்வேன்! தெய்வம் என்பதே உலகில் இல்லையா?''

இவ்வாறெல்லாம் புலம்பிய அனு மன் இந்திரசித்து சென்ற வழியே செல்ல எண்ணுவான்; மிக்க துயரினால் பெரு மூச்சுவிட்டுக் கீழே விழுந்து ஏங்குவான்; உடல் நடுங்குவான்; தலையைத் தரைமேல் முட்டி மோதிக் கொள்வான்.

''அந்தோ! 'என் எண்ணம் பலித்து விட்டது. மூவுலகும் இனி பிழைத்து விட்டது' என எண்ணியிருந்தேனே! பாவியாகிய இந்திரசித்து வாளினால் பிராட்டியை வெட்டிவிட்டானே! அரக்கரின் மாயச் செயல் பலித்து விட்டதே! அறம் மடிந்துவிட்டதே! கற்பின் செல்வியை என் கண்ணெதிரி லேயே கொன்றுவிட்டானே! சிற கொடிந்த பறவை போன்று செயலற் றிருந்தேனே! பிராட்டியை மீட்பதற்கு நான் மேற்கொண்ட செயல் அழ காகவே உள்ளது. தெய்வத் தவத் தினளாய பிராட்டியைச் சிறை வைத்த பாவியாகிய இராவணனுடைய மகனே என் அன்னையை வெட்டக் கண்டும் நான் வாளாவிருந்தேனே! என் கருணையே கருணை! பிராட்டியாரை எதிரிகள் கொல்வதற்கன்றோ நான் உதவி செய்திருக்கிறேன்! மீட்பதற் கான வழிகள் எவற்றைச் செய்தேன்? 'கண்டனன் தேவியை!' என்று கூறிய யான், 'கொன்றனன் அன்னையை!' என்று கூறவோ இன்னம் உயிரோடிருக் கிறேன்! கடத்தற்கரிய கடலைக் கடந்து இந்த ஊரை எரியூட்டி, கரிய கடலின் மேல் சேதுவைக் கட்டி, மேருவையும் கடந்து சென்று சஞ்சீவி மலையைக் கொண்டு வந்து இறந்தோரையெல் லாம் எழுப்புவித்துப் பெருமை பெற்ற தெல்லாம் இதற்காகவோ? ஐயோ என்ன செய்வேன்! என் பெருமை யனைத்தும் கடலிற் கரைத்த சந்தனம் போலப் பயனற்றுப் போய்விட்டதே! என் எதிரிலேயே அன்னையைப் பகை வன் கொல்ல-அதை நான் என் கண் களால் பார்த்து நின்றேனே! காய் கனிகளைப் பறித்துத் தின்பதற்கோ எனக்குக் கைகள் இருக்கின்றன? என் வீரமே வீரம்!''

இவ்வாறு அனுமன் பலவாறு வாய் விட்டுப் புலம்பினான். என்ன செய் வது? எனத் தெரியாது திகைத்தான். இராமபிரானிடம் இச்செய்தியைச் சொல்லியே விடுவது என்ற முடிவுக்கு வந்தான்.

உடலும் உள்ளமும் உயிரும் பதைப் பவனாகி இராமபிரானையடைந்து நீரொழுகும் கண்களுடன் அனுமன் இராமன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். இராமபிரான் அனு மனைத் தன் கையால் பற்றியெடுத்து ''என்ன செய்தி?'' எனக் கேட்டான். சீதை வெட்டுண்ட செய்தியை அனு மன் செப்பினான்.

சீதை வெட்டுப்பட்ட செய்தியைக் கேட்டதும் இராமர் மூர்ச்சையானார். இலக்குவன் முதலியோர் அரக்கரைக் கொல்வதே முதல் வேலை எனச்சபதம் செய்தனர். சுக்ரீவன் முதலியோர் இலங்கைமேல் பாய்ந்து அதனை அழிக்க முற்பட்டனர். இந்திரசித்து அயோத்தி செல்லப் போவதாகக் கூறிய செய்தியை அப்போது அனு மன் அவர்கட்குக் கூறினான். இந்திர சித்துவைத் தொடர்ந்து சென்று அவனை அழிக்க இராமபிரான் முடிவு செய்தார். தன் தோள்களின் மேல் ஏறிக்கொள்ளுமாறு இராம இலக் குவரை அனுமன் வேண்டிக் கொண் டான். காற்றினும் கடிதிற் சென்று இந்திரசித்துவைப் பிடித்துவிடுவதாக அனுமன் வீரம் பேசினான்.

இவ்வாறு அனுமன் பேசிக் கொண் டிருக்கும்போது, விபீடணன் ஒன்று கூறத் தொடங்கினான்.

''ஐயனே! பிராட்டியார் அசோக வனத்தில் உள்ளாரா? இல்லையா? என் பதை நானே நேரில் சென்று அறிந்து வருகின்றேன். உண்மையறிந்த பிறகு எந்த முடிவுக்கும் வரலாம்!''

இந்திரசித்துவின் செயல் ஒருவேளை மாயையாகவும் இருக்கக்கூடும் என வீபீடணன் கருதினான். 'பாம்பின் கால் பாம்பறியும்!' அன்றோ!

விபீடணன் வண்டினுருவங்கொண்டு அசோக வனத்தையடைந்தான். பிராட்டியார் அங்கே உயிருடன் இருக்கக் கண்டு மகிழ்ந்தான். மீண்டு வந்து இராமர் முதலிய அனைவரிட மும் இச்செய்தியைக் கூறினான். சீதை உயிருடன் இருப்பது கேட்டு அனை வரும் மகிழ்ந்தனர்.

நிகும்பலை என்னும் தேவாலயம் நோக்கி இந்திரசித்து யாகம் செய்யச் சென்றிருப்பான் என்பதை மாயையில் வல்ல விபீடணன் உணர்ந்து கொண் டான். இந்திரசித்துவைத் தொடர்ந்து அரக்கர் சேனையும் சென்று கொண் டிருப்பதையும் மாயையால் விபீட

ணன் உணர்ந்தான். நிகும்பலையாகம் முற்றுப் பெறுவதற்கு முன்னமேயே இந்திரசித்துவைக் கொன்று ஒழிக்கத் தன்னுடன் இளைய பெருமாளை அனுப்பி வைக்குமாறு இராமபிரானை விபீடணன் வேண்டிக் கொண்டான்.

விபீடணனுடன் இளைய பெருமாளும் அனுமன் முதலான வானர வீரர் பலரும் நிகும்பலை அடைந்தனர். அங்கே இவர்கட்கும் அரக்கர்கட்கும் பெரும் போர் நடைபெற்றது. காலங் கடத்தாமல் வேள்விக்கு இடையூறு விளைவிக்குமாறு விபீடணன் இலக்குவனைத் துரிதப்படுத்தினான். இப் போரில் அரக்கர் சேனை அழிந்து போயிற்று. எனவே, இந்திரசித்து மனந் தளர்ந்தான். அப்போது அனுமன் இந்திரசித்துவின் எதிரே வந்து நின்றான். இந்திரசித்துவைப் பலவாறு இகழ்ந்து பேசத் தொடங்கினான்.

''வஞ்சனையிலும் பொய்யிலும் வல்லவனே! நான் உன்னை இரந்து கேட்டுக் கொண்டும் சானகியாரை வாளால் வெட்டி வீழ்த்தினாயே அது என்னவாயிற்று? புட்பக விமானமேறி அயோத்தி செல்லப்போவதாகக் கூறினாயே அது என்னவாயிற்று? கடல் போன்ற சக்கர வியூகத்தை நாங்கள் கண்டதில்லையா? வில்லின் நாணொலி எங்களுக்குப் புதியதா? அயோத்தி சென்று பரதனைச் சுற்றத்தாருடனே அழித்துவந்தது எப்போது? நீ தொடங்கிய வேள்வி நன்றாக முடிந்துவிட்டதா? பரதனை வென்று உயிருடன் வந்தவர் உன்னைப்போல் உலகில் வேறு யாருளர்? சத்துருக்கனனைக் கண்டு உன் வில் வலிமையை நன்கு உணர்த்தினாயா?''

''இலக்குவனின் அனல் கக்கும் அம்புகள் பாய்வதால் உன் உடலிலிருந்து இரத்தம் பெருக்கெடுக்கப் போகிறது. நீ செய்கின்ற மாயப் போர் இன்றோடு அழிந்துவிடும். நீ விடுவது நாக பாசமோ, பிரம்மாத்திரமோ, பாசுபதமோ, சக்கரப்படையோ யாதாயினும் சரி. இவற்றை யெல்லாம் கண்டு இனி நாங்கள் அஞ்சப்போவதில்லை. நீங்கள் வரங்களையும், மாயையும், தெய்வப் படைக்கலங்களையும் பெற்றிருப்பினும் உங்களை நாங்கள் இன்று கொல்வது இறுதி. தேவர் மூவர் முதலான யாவர் வந்து உம்மைத் தாங்கினாலும் நீங்கள் இன்று இறப்பது உறுதி. உங்களுக்கு இடக்கண்ணும் இடது தோளும் துடிக்கின்றதல்லவா? அவ்வாறு துடிப்பது அபசகுனம் என்பதை நீங்கள் அறியீரா? உன்னைக் கொல்வதாக இலக்குவன் சபதம் செய்துள்ளான். இப்போரைக் காண இமையவரும்கூடி நிற்கின்றனர். இன்னும் ஏன் தாமதம் செய்கிறாய்? வந்து, வானுலகம் சேர்!''

இவ்வாறு, அனுமன் இந்திரசித்துவைப் பலபடப் பரிகசித்துக் கூறினான்.

இதனைக் கேட்ட இந்திரசித்து வீர வாதங்கூறி யுத்த சன்னத்தனானான். போர் கடுமையாக நடைபெற்றது. அனுமன் பெரிய மலையொன்றினை எடுத்து இந்திரசித்துவின் மேல் வீசினான். அம்மலையின் விசையைக் கண்டு அரக்க வீரர்கள் அஞ்சியொளிந்தனர். இந்திரசித்து அம்மலையைத் தூளாக்கி வீழ்த்தினான். அம்புகள் பல எய்து இந்திரசித்து அனுமனைத் துன்புறுத்தவே, அனுமன் அயர்ந்து போனான். அப்போது, விபீடணன் ஆலோசனைப்படி இலக்குவன் அங்கு வந்து சேர்ந்தான். அயர்வு நீங்கிய அனுமன் தன் தோள்மேல் ஏறிப் போர்புரியுமாறு இளைய பெருமாளை வேண்டிக்கொண்டான்.

இந்திரசித்துவுக்கும்இலக்குவனனுக்கும் பெரும்போர் நடைபெற்றது. இந்திரசித்து செலுத்திய பிரம்மாத்திரம் முதலான பல தெய்வப் படைக்கலங்களும் இலக்குவனை ஒன்றும் செய்ய முடியவில்லை. எனவே, இந்திரசித்து விபீடணனைப் பலவாறு இகழ்ந்து பேசினான். சினங்கொண்ட விபீடணன் இந்திரசித்து ஏறி வந்த தேரின் சாரதியையும் குதிரைகளையும் கொன்றொழித்தான். எனவே, இந்திரசித்து வானத்தே மறைந்து சென்று தன் தந்தையை அடைந்தான். சீதையை விட்டுவிடுமாறு தன் தந்தைக்கு அறிவுரை கூறினான். இது கேட்டு இராவணன் வெகுண்டெழுந்தான். தந்தையின் சினத்தைத் தணித்து இந்திரசித்து மறு நாள் போர்க்களஞ் சென்றான்.

போரில் இலக்குவன் இந்திரசித்துவைக் கொன்றான். இந்திரசித்துவின் தலையைக் கையில் ஏந்தி அங்கதன் முன்னே செல்ல, அனுமனின் தோள் மேல் அமர்ந்தவண்ணம் இளைய பெருமாள் பின்னே சென்று இராமனைக் கண்டு வணங்கினார். இராமரும் தம்பியைப் பலபடப் புகழ்ந்தார்.

இந்திரசித்து மாண்ட செய்தி இராவணனுக்கெட்டியது. சீதையாலன்றோ இந்திரசித்து மாண்டான்! எனவே, சீதையைக் கொல்லப்போவதாகக் கூறி இராவணன் எழுந்தான். அது கண்ட மகோதரன் என்பவன் பலப்பல நியாயங்களைக் கூறி இராவணனைச் சாந்தப்படுத்தினான். பின்னர், இராவணன் சபா மண்டபம் சேர்ந்தான். தன் சேனைகளை யெல்லாம் ஒன்றுதிரட்ட ஆணை பிறப்பித்தான். சேனைகள் கடலெனத் திரண்டன.

''பகையை வென்று வருவோம்!'' என அரக்கர் சேனை சபதம் செய்தது. தொன்று தொட்டு வருகின்ற சேனையாகிய மூல பலத்தை இராமபிரான் தன் அம்பு மழையால் கொன்று குவித்தார். இராவணனின் மூலபலத்தை அழித்த பின்னர், இராவணனும் இலக்குவனும் போர்புரியும் இரணகளத்தை நோக்கி இராமபிரான் சென்றார்.

அங்கே இராவணன் பல படைக்கலங்களை யெறிந்து பகையை அழித்துக் கொண்டிருந்தான். அவ்வேளையில் மயன் தந்த வேல் ஒன்றினை இராவணன் விபீடணனை நோக்கி எறிந்தான். அவ்வேலினை யேற்க அனுமன், அங்கதன், சுக்ரீவன் ஆகிய மூவரும் ஒருவரையொருவர் முந்திக்கொண்டு வந்தனர். இம்மூவரையும் முந்திவந்து

இளையபெருமாள் அவ்வேலினைத் தன் மார்பிலேற்று மூர்ச்சையானார்.

சாம்பவான் வேண்டிக் கொண்டபடி அனுமன் சஞ்சீவி மலையைக் கொண்டு வந்து இலக்குவனுக்கு உயிரைத் தந்தான். இராமபிரானால் கொல்லப்பட்ட மூலபலச் சேனைகளைக் காண விரும்பிச் சுக்ரீவன் முதலானோர் போர்க்களஞ் சென்றனர். மூலபலங்கள் வீழ்ந்துகிடக்கும் போர்க் களத்தினைக் கண்டு இராமபிரானின் திறமையை வியந்தனர்.

மூலபலம் உட்படத் தன் சேனைகள் மடிந்துகிடக்கும் உண்மையை அறிதற் பொருட்டு இராவணனும் போர்க்களஞ் சென்று கண்டான். பின் தன் அரசவை அடைந்து எஞ்சிய சேனைகளைத் திரட்டிக் கொண்டு போர்புரிவதற்காக இராவணன் தேரேறினான். இந்திரன் அனுப்பிய தேரில் அப்போது இராமபிரானும் ஏறிக் கொண்டார்.

இராமருக்கும் இராவணனுக்கும் நடைபெற்ற கடும் போரில், இராமர் இராவணனை வதைத்துக் கொன்றார். இராவணனுக்கு ஈமக்கடன் செய்யுமாறு விபீடணனிடம் இராமர் கூறினார்.

விபீடணனுக்கு முடி சூட்டுமாறு இலக்குவனிடம் இராமபிரான் கூறினார். முடிசூட்டு விழா இனிதே முடிந்தது. முடிசூடிக் கொண்ட விபீடணன் இராமன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். இராவணன் இறந்த செய்தியைச் சீதைக்குத் தெரிவிக்குமாறு இராமர் அனுமனைக் கேட்டுக் கொண்டார்.

அனுமன் இராமபிரானை வணங்கிப் பின், சீதாபிராட்டி சிறையிருக்கும் அசோகவனத்தை யடைந்தான். இராம நாமங்களைப் பல முறை சொல்லிச் சீதை முன் ஆடிப்பாடி நின்றான். 'இராவணன் இறந்தான்' என்ற மங்கலச் செய்தியைப் பிராட்டிக்குத் தெரிவித்தான்.

(தொடரும்)

---

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

''நான்தான் உஷஸ்தி சாக்ராயணர்''

அவருடைய புலமையையும் பெருமையையும் குறித்து ஏற்கனவேயே அறிந்திருந்த அரசன் அவரைப் பணிவுடன் வணங்கி ''ஐயா! இந்த வேள்வியை நடத்தும் பொறுப்பை உங்களிடமே ஒப்படைக்க நான் விரும்பினேன். ஆனால், தாங்கள் இருக்குமிடம் எனக்குத் தெரியவில்லை. எனவேதான், இவர்களை ஏற்பாடு செய்தேன். தாங்களே இதை மனமுவந்து ஏற்று நன்கு நடத்திக் கொடுக்க வேண்டுகிறேன்'' என்று கூறினான்.

''அவ்வாறே ஆகட்டும். ஆனால், இவர்களே ஓதட்டும். இவர்களுக்கு நீ கொடுக்கும் தட்சிணைக்குச் சமமாக எனக்கும் கொடு'' என்று உஷஸ்தி கூறியதற்கு அரசன் இசைந்தான்.

அங்கிருந்த வேதியர்கள் வேள்விச் சடங்குகளின் உட்பொருளைச் சரிவர உணர்ந்து கொள்ளாமல் அவற்றைச் செய்கை யளவில் மட்டுமே எந்திரம் போல் செய்து கொண்டிருந்தார்கள். ஆயினும், உஷஸ்தி எழுப்பிய கேள்விகளுக்கு விடை தெரிந்து கொள்ளாமல் அவர்கள் வேள்வியை மேலே தொடர விரும்பவில்லை. மேலும், அவ்வாறு தொடருவதும் முறையாகாது. ஏன் எனில், பொருளைத் தெரிந்து கொள்ளாமல் ஒரு சடங்கைச் செய்வோர் தென்திசைக்குச் செல்கின்றனர் என்று சுருதி கூறுகிறது.

நிலைமையை உணர்ந்த பிரஸ்தோதா உஷஸ்தியிடம் ''ஐயா! பிரஸ்தாவத்திற்குரிய தேவதை யார் என்பதை அறிந்துகொள்ள ஆவலுள்ளவனாயிருக்கிறேன்'' என்று வினவினார்.

உஷஸ்தி ''பிரஸ்தாவம் என்னும் துதிக்குரியதேவதை பிராணன் அல்லது காற்று. எல்லா ஜீவராசிகளும் பிராணனுடனேயே தோன்றுகின்றன.'' என்று மறுமொழி பகர்ந்தார்.

அடுத்து, உத்கீதா கேட்டார்: ''வணக்கத்திற்குரியவரே! உத்கீதை என்னும் துதிக்குரிய தேவதை யார்?''

உஷஸ்தி ''உத்கீதைக்குரிய தேவதை ஆதித்யன் அல்லது ஆற்றல். எல்லா ஜீவராசிகளுக்கும் மூலாதாரம் சூரியன். உதய சூரியனை அவை போற்றித் துதிக்கின்றன. மேலும், எவ்வாறு உதய சூரியன் உயரக் கிளம்பிச் செல்கிறதோ, அவ்வாறே உத்கீதை துதியின் ஒலியும் மேலோங்கிச் செல்கின்றது'' என்று விளக்கினார்.

அதைத் தொடர்ந்து, பிரதிஹார்த்தா உஷஸ்தியிடம் ''மதிப்பிற்குரிய பெரியவரே! பிரதி ஹாரம் அல்லது இறுதித்துதிக்குரிய தேவதை யார்?'' என்று கேட்டார்.

''அன்னம் அல்லது உணவு. உணவினால்தானே எல்லா ஜீவராசிகளும் உயிர் வாழ்கின்றன. உணவில்லையெனில் உயிர் வாழ்வும் இல்லையல்லவா!'' என்றுரைத்தார் உஷஸ்தி. அங்கிருந்த வேதியர்களும் ஐயம் நீங்கித் தெளிவு பெற்றனர்.

வாழ்வே ஒரு மாபெரும் வேள்வி. உயிர் வாழ்வதைச் சாத்தியமாக்குவது காற்று, ஆற்றல், உணவு ஆகியவையே. இதை உணர்ந்து செயலாற்றினால் வாழ்வு வளம் பெறும். செய்யும் செயல் ஒவ்வொன்றின் உட்பொருளையும் நன்குணர்ந்து, வாழ்வின் அடிப்படைக்குக் காரணமான காற்று, ஆற்றல், உணவு ஆகியவற்றை இயைபுபடுத்திப் பணிபுரிந்தால், மானிட வாழ்வு மகிழ்வு நிரம்பியதாக விளங்கும் என்பது உறுதி.



# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

**5-7-78, 6-7-78 அன்று திருமலையில் கூடிய குழு கூட்டத்தின்போது தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு:**

பொதட்டூரிலுள்ள தி. தி. தேவஸ்தான திருமண மண்டபத்தில் பொது உணவு அறை ஒன்றினைக் கட்டுதற்கு ரூ. 1.35 இலட்சம் வழங்க குழு தீர்மானித்துள்ளது.

அனந்தபூரில் தி. தி. தேவஸ்தானத்தாரின் திருமண மண்டபம் ஒன்றினைக் கட்டுதற்கு குழு ரூ. 7 இலட்சம் ஒதுக்கியுள்ளது.

திருமலையில் இவ்வருட அக்டோபர் மாதம் நடைபெறவிருக்கும் ஸ்ரீ வேங்கடேஸ்வரர் பிரம்மோற்சவத்தின் போது சுகாதாரம் சம்பந்தப்பட்ட ஏற்பாடுகளை மேற்கொள்ள ரூ.34,262 ஒதுக்குவதென்று குழு முடிவு செய்துள்ளது.

மங்களூர் ஸ்ரீவேங்கடேஸ்வரசுவாமி கோயில் தர்மகர்த்தா உதவியுடன், அவ்வூரில் தி. தி. தேவஸ்தானத்தாரின் தகவலறிவிப்பு நிலையம் ஒன்றினை செயற்படுத்த குழு தீர்மானித்துள்ளது.

ஸ்ரீகாகுளம் மாவட்டம் அய்யவாரி பேட்டாவில் ராமமந்திரம் ஒன்றினைக் கட்ட குழு ரூ. 10,000 ஒதுக்கியுள்ளது.

மெஹ்பூப்நகரில் 'வேங்கடேஸ்வரா கலா மந்திரம்' எனும் பெயரில் கலையரங்கு ஒன்றினைக் கட்ட, தி. தி. தேவஸ்தானத்தின் பங்காக ரூ. 2.5 இலட்சம் வழங்க குழு தீர்மானித்துள்ளது.

23—8—78 முதற்கொண்டு திருப்பதியில் ஸ்ரீ தியாகராஜசுவாமி விழாக் குழுவின் சார்பில் நடைபெறவிருக்கும் ஸ்ரீ தியாகராஜசுவாமியின் 35வது ஆராதனை விழாவிற்கென, மேற்படி குழு கேட்டுக் கொண்டதன்பேரில், ரூ. 10,000 வழங்க குழு முடிவு செய்துள்ளது.

தி.தி. தேவஸ்தான ஊழியர் சங்கத்திற்கென, பல்வேறு மனையகம் மற்றும் திறந்தவெளி சம்பந்தப்பட்ட விளையாட்டுப் (Indoor and Outdoor games) பொருட்களை வாங்குதற்குக் குழு ரூ. 9,800 ஒதுக்கியுள்ளது.

தி. தி. தேவஸ்தான ஊழியர்கள், மற்றும் அவர்களுடைய குடும்பத்தார் பயன்பெறும் வகையில் 5 தையற் பொறிகளை வாங்குவதென்று குழு முடிவு செய்துள்ளது.

அண்மையில் திருப்பதிக்கு வருகை புரிந்த ஆந்திர மாநில முதல்வர் டாக்டர் எம். சென்னரெட்டி அவர்கள் தி. தி. தேவஸ்தானத்திற்கு வழங்கிய இந்து சமயக் கலாச்சார மேம்பாடு சம்பந்தப்பட்ட சில ஆக்கப்பூர்வமான கருத்துக்களை படிப்படியாக செயற்படுத்துவதென்று குழு தீர்மானித்துள்ளது.

திருமலையில் பாபநாச வரியில் அணை ஒன்று கட்டப்படுவதன் சம்பந்தமாக, 500 கே. வி. ஏ. டிஸ்ட்ரிபியூஷன் டிரான்ஸ்பார்மர் ஒன்றினை, கிராம்ப்டன் க்ரீவிஸ் நிறுவனத்தாரிடமிருந்து வாங்க குழு ரூ. 42,900 ஒதுக்கியுள்ளது.

கிருஷ்ணா மாவட்டம் குடிவாடா நகரத்திலுள்ள ஏ. என். ஆர். கல்லூரியில் பொது வழிபாட்டுக் கூடம் ஒன்றினைக் கட்டுதற்கு, அக்கல்லூரி தன் பங்காக ரூ. 1 இலட்சம் வழங்குவதாக இருப்பின், தேவஸ்தானத்தின் பங்காக குழு ரூ. 1 இலட்சம் வழங்க முடிவு செய்துள்ளது.

சித்தூர் மாவட்டம் பங்காருபாளையத்தில் ஸ்ரீ ராமபஜனை மந்திரம் ஒன்றினைக் கட்ட ரூ. 10,000 வழங்க குழு முடிவு செய்துள்ளது. ★

---

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

நாடகம், தமிழ்நாடு ஆகிய மாநிலங்களைச்சார்ந்த அறநிலையத்துறை ஆணையர்களின் மாநாடு ஒன்று நடைபெற்றது. ஆந்திரமாநில அறநிலைய அமைச்சர் திரு. வி. வெங்கடநாராயணு அவர்கள் இம்மாநாட்டைத்திறந்து வைத்து உரையாற்றுகையில் சமுக வாழ்கையில் அன்றைய சமய நிறுவனங்களும், அறநிலையங்களும் ஆற்றிய பணியைக் குறிப்பிட்டு, அப்பணியை இன்றைய சமய நிறுவனங்கள் மீண்டும் மேற்கொள்ளப்படவேண்டிய அவசியத்தை வலியுறுத்தினர். தொடர்ந்து பேசுகையில், கோயில் நிதி, இந்து சமயக் கோட்பாடுகளைப் பரப்புவதற்கு மட்டுமின்றி, சாதராண மனிதனின் பொருளாதார வாழ்க்கையை மேம்படுத்தும் வகையிலும் பயன் படுத்தப்படல் வேண்டும் என்றும் கூறினர்.

இரண்டு நாட்கள் நடைபெற்ற இம் மாநாட்டில் பல்வேறு பிரச்சனைகள் அலசப்பட்டன. பழைய நினைவுச் சின்னங்கள் மற்றும் புதைப் பொருள் ஆராய்ச்சி பற்றிய 1958-ம் ஆண்டு சட்டத்தின் கீழ், சமய அறநிலையங்களைச் சார்ந்த உடைமைகள் பற்றிய பிரச்சனைகள், இந்து சமயக் கோட்பாடுகளைப் பரப்புவது பற்றிய முயற்சிகள், சமய நிறுவனங்களில் நிலவும் பரம்பரை உரிமை ஆகியவற்றைப் பற்றிய கருத்துக்கள் இம்மாநாட்டில் எடுத்துரைக்கப்பட்டன. மேலும் மற்றைய மாநிலங்களின் தகவலறிவிப்பு நிலையங்கள் செயற்படும் வகையில், அதற்கென தங்களுடைய இட வசதிகளை சமய நிறுவனங்கள் ஒதுக்க வேண்டும் என்று ஒரு கருத்து ஏகமனதாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. இந்து சமயக் கலாசாரம் மற்றும் அதன் கோட்பாடுகளின் பெருமையினை விளக்க பல கலை நிகழ்ச்சிகள் பிரம்மோற்சவம் மற்றும் வருடாந்திர சமய விழாக்களின் போது நடத்தும் வகையில் தான் மேற்கொண்ட திட்டங்களை ஆந்திர மாநில அரசு மாநாட்டிற்கு விளக்கியது. சாதாரண மனிதனும் பயன்பெறும் வகையில் இந்து சமய நூல்கள் இலவசமாக அச்சிட்டு விநியோகிக்கப்படல் வேண்டும் என்று மாநாடு கருதியது. வேத உபநிஷத்துக்களின் பெருமையை நாடு உணரும் வகையில் ஆந்திரமாநில அரசு எடுத்துக் கொண்டு வரும் முயற்சிகளை மாநாடு பெரிதும் பாராட்டியது. இம்மாநாட்டிற்கு தி.தி.தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. ஆனந்தராவ் முதனியார், தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. சி. அன்னா ராவ் ஆகியோரும் பங்கேற்றனர்.

★

# ஸ்ரீ த்யாகராஜ ஸுப்ரபாதம்



திரு. M. V. ராமநாதகனபாடிகள், திருப்பதி.

*[ஸ்ரீ மூள்ளண்ட்றம் எம். வி. ராமநாத கனபாடிகள் அவர்கள் தி. தி. தேவஸ்தான கல்வித் துறையில் குறிப்பாக வடமொழித் துறையில் சுமார் 36 ஆண்டுகள் பணிபுரிந்து அண்மையில் ஓய்வு பெற்றவர். இவர் எழுதிய ''ஸ்ரீ வேங்கடேசுவர விசேஷ வைபவ ஸ்தோத்திரம்'' 1965-ல் அச்சிடப் பட்டது. அதனைத் தொடர்ந்து ஸ்ரீ காளஹஸ்தீஸ்வரர், திருத்தணி வதியும் ஸ்ரீ சுப்ரமண்யசுவாமி, மங்காபுரம் வதியும் ஸ்ரீ வேங்கடேசுவர சுவாமி, திருப்பதி ஸ்ரீ கபிலேசுவரஸ்வாமி ஆகியோர் மீது ஸுப்ரபாத ஸ்லோகங்களை இயற்றினர். இவற்றில் இறுதி இரண்டும் தி. தி. தேவஸ்தானத்தின் வெளியீடுகளாகும். அண்மையில் விநாயகர் மீது இவர் இயற்றிய ''ஸ்ரீ பஞ்சமூர்த்தி விநாயக பஞ்சரத்னம்'' எனும் ஸ்தோத்திர நூல் ஆசிரியராலேயே வெளிடப்பட்டுள்ளது. 1969-ல் வேதம் சம்பந்தப்பட்ட துறையில் ஆந்திர மாநில அரசாங்கம் இவருக்கு விருது வழங்கி கௌரவித்தது. சோதிடம் மற்றும் கைரேகை துறைகளில் ஆழ்ந்த புலமை பெற்றுள்ள இவர் தற்போது ஸ்ரீத்யாகராஜ சுவாமிகளின்மீது எழுதிய ஸுப்ரபாத ஸ்லோகங்களை இம்மாத ஸப்தகிரி இதழிலிருந்து தொடர்ந்து வெளியிடுவதைப் பெரும் பேருகக் கருதுகிறோம். ஸ்ரீ த்யாகராஜ ஸுப்ரபாத ஸ்லோகங்கள் அண்மையில் டாக்டர் எம். பாலமுரளிகிருஷ்ணு அவர்களுடைய இன்குரலால் பதிவு செய்யப்பட்டு (H. M. V.) அவ்வப்போது அவை வானொலியிலும் ஒலிப் பரப்பப்பட்டு வருகின்றன. ப்ரஹ்மஸ்ரீ ஷி கனபாடிகள் அவர்கள் வேத மந்திரங்களை புல்லாங்குழலில் நன்ருக வாசித்துக் காட்டுவார். ஆதலால் இவருக்கு ''வேத வேணு விசாரத'' ''வேத பாஸ்கர்'' ''ஸ்ரீ வேங்கடேசுவர வரப்ரஸாதகவி'' முதலான பல விருதுகள் வழங்கப்பட்டுள்ளன.*

ஸ்ரீமத்பஞ்ச நதக்ஷேத்ரே ஸ்திரவாஸின் மஹாகுரோ |
நாதப்ரஹ்மஸ்வரூபேண பரேப்ரஸ்மணி லீயஸே ‖1‖

தத்ரஹஸ்யப்ரபோத்தாத்வம் உத்திஷ்ட குருசேகர|
ஸங்கீதகானரஸிகாந் த்வமுத்தரத்து மிஹார்ஹஸி‖2‖

நித்யம் த்வயாக்ருத மதீவ ஸுசோபனம் யத்
ஸ்ரீராமநாம பஜனம் ஸகலார்த்தம் ஹி |
ஸங்கீர்த்தனேன ஸகலானபி தோஷய த்வம்
ஸ்ரீ த்யாகராஜ ஸுகுரோ தவ ஸுப்ரபாதம் ‖3‖

த்வத்ராகதாளலயபூரித கீர்த்தநாநி
பக்திப்ரபத்திமிளிதாநி ஸுகாயகாநாம் |
இஷ்டார்த்தஸித்தி வரதாநி மனோஹராணி
ஸ்ரீத்யாகராஜ ஸுகுரோ தவ ஸுப்ரபாதம் ‖4‖

ஸ்ரீபாரதீஜன மனோரத கானலக்ஷ்ய
ஸத்ஸம் ப்ரதாய பரிரக்ஷணலக்ஷணக்ஞ|
ஸத்கீர்த்தனம் ஸுலபமார்க்க க்ருதிம் ப்ரணேதః
ஸ்ரீத்யாகராஜ ஸுகுரோ தவ ஸுப்ரபாதம் ‖5‖

த்வத் கீர்த்தனே சிவமனோ: ப்ரதமம் மகாரம்
நாராயணஸ்ய மனுரேய மதேரிதம் ஹி |
தஸ்மான் மராமனுரிதி ப்ரதிதஸ்த்வயாபீ |
ஸ்ரீத்யாகராஜ ஸுகுரோ தவ ஸுப்ரபாதம் ‖6‖

வால்மீகிநா க்ருதமிதி ப்ரதிதம் சரித்ரம்
ராமாயணம் கலியுகே பவதா க்ருதம் ஹி |
ஸ்ரீராமபக்தியுத கீர்த்தன கான தக்ஷ
ஸ்ரீத்யாகராஜ ஸுகுரோ தவ ஸுப்ரபாதம் ‖7‖

வால்மீகி ரேவ லயகானவிலோலுபோத்ய
ஸ்ரீத்யாகராஜகுருரித் யவதாரவாம் ஸ்த்வம் |
தஸ்மாத் பவா நபர ஆதிகவிர் விபாஸி
ஸ்ரீத்யாகராஜ ஸுகுரோ தவ ஸுப்ரபாதம் ‖8‖

தாளம் க்ரே பஜனஸாதனதம்புராதீன்
த்ருத்வா ப்ரபாதஸமயே ஸ்ம்ருதி போதகஸ் த்வம் |
த்வத்கீர்த்தனம்ருதரஸாத் ஸகலாః ப்ரபுத்தாः
ஸ்ரீத்யாகராஜ ஸுகுரோ தவ ஸுப்ரபாதம் ‖9‖

ராமம் ஸதா ஹரி ஹராத்மக மைக்யபுத்யா
ஸ்தோத்ரம் கரோஷி தவ கீர்த்தனலக்ஷ்யஸித்யை|
அத்வைதபாவ முபதிஸ்ய குருர் விபாஸி
ஸ்ரீத்யாகராஜ ஸுகுரோ தவ ஸுப்ரபாதம் ‖10‖

ஸ்ரீமத்புதேந்த்ரகிரிராஜஸுதஸ்யராம—
ப்ரஹ்மாக்யபுண்யசரிதஸ்ய ஸுபுத்ரராஜ |
ஸ்ரீராமநாம குணவைபவகானலோல
ஸ்ரீத்யாகராஜ ஸுகுரோ தவ ஸுப்ரபாதம் ‖11‖

ஸ்ங்கீதகானரஸிகாக்ரசிகாமணிஸ்ஸந்
தந்நாதகீர்த்தனமுகாத் ஸகலார்த்தபாத் த்வம் |
த்வாமேவ நித்ய மனுஸம்ஸதி கானலோகः
ஸ்ரீத்யாகராஜஸுகுரோ தவ ஸுப்ரபாதம் ‖12‖

ஸ்ரீராமசந்த்ர மனுஸ்ருத்ய ஜலே நிவிஷ்டம்
ஸ்ம்ப்ரார்த்தயந் மம க்ருஹம் ப்ரவிஸேதி பக்த்யா |
த்வத்பக்திபாவமனுஸ்ருத்ய க்ருஹாகதோ ஹி
ஸ்ரீத்யாகராஜஸுகுரோ தவ ஸுப்ரபாதம் ‖13‖

ஸங்கீதசாஸ்த்ரபரிரக்ஷணலக்ஷ்யத்ருஷ்ட்யா
பக்திப்ரபத்திகலனுத் தவ கார்யஸித்யை |
ஸங்கீதகானக்ருதிகீர்த்தனகாவ்யகர்த்தா
ஸ்ரீத்யாகராஜஸுகுரோ தவ ஸுப்ரபாதம் ‖14‖

த்வத்கீர்த்தனம்ருத மஹோ பரமார்த்ததத்வம்
ஆஸ்வாதயம்ஸ்ச மனுஜாந் ஸகலார்த்தஸித்யை |
தஸ்மாத் யஸஸ்தனுப்ருதாம் கணனே க்ரகண்ய
ஸ்ரீத்யாகராஜஸுகுரோ தவ ஸுப்ரபாதம் ‖15‖

(தொடரும்)

**ராசி பலன்** (1-9-78 முதல் 30-9-78 வரை) டாக்டர் டி: அர்க்கசோமயாஜி, M.A., Ph.D. திருப்பதி.

மேஷம்: [அசுவனி, பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய] ராகுவினால் பண வரவு, சனியினால் பண நஷ்டம், தன் பிள்ளைகள் அல்லது பெண்களுடன் பிரிவு அல்லது அவர்களுடன் கருத்து வேறுபாடுகள், குருவினால் உறவினர்கள் மூலம் கருத்து வேறுபாடுகள், மனயமைதி இழத்தல், செவ்வாயினால் மாதத்தின் முதல் 10 நாட்களின் போது பண வரவு, வெற்றி, உடல் நலமேன்மை ஆனால் இறுதி 20 நாட்களின்போது மனைவியுடன் கருத்து வேறுபாடு அல்லது கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோய்களுக்குள்ளாதல், சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது உடல் நலக்குறைவு, எதிரிகளினால் துன்பம் ஏற்படல் ஆனால் இறுதி 15 நாட்களின்போது எதிரிகளை வெற்றி கொளல், உடல் நலமேன்மை, சுக்ரனால் பெண்களின்மூலம் கெடுதிகள் ஏற்படல், புதனால் மாதத்தின் முதல் 20 நாட்களின்போது மனைவி அல்லது தன் மக்களுடன் கருத்து வேறுபாடுகள் ஆனால் இறுதியில் வெற்றி, மதிப் புயர்தல்.

ரிஷபம்; [கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோஹிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய] ராகுவினால் மனக் கவலைகள், சனியினால் பண நஷ்டம், நண்பர்களை இழத்தல், குருவினால் அலுவலகக் கவலைகள், ஏமாற்றங்கள், செவ்வாயினால் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல், உடல் நலம் கெடல் ஆனால் இறுதி 15 நாட்களின்போது பண வரவு, வெற்றி, சூரியனால் உடல் நலம் கெடல், எதிரிகளால் கெடுதிகள் ஏற்படல், சுக்ரனால் இகழ்ச்சிக்குள்ளாதல், ஏமாற்றங்கள், புதனால் குடும்பத்தில் சச்சரவுகள்.

மிதுனம்; [மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய] ராகுவினால் கருத்து வேறுபாடுகள், சனியினால் பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள் வாங்கப்பெறல், குடும்பத்தில் மகிழ்ச்சி, குருவினால் பொருள் வரவும் வெற்றியும், செவ்வாயினால் உடல் நலம் கெடல், எதிரிகளாலும், தன் மக்களாலும் மன யமைதி இழத்தல், சூரியனால் பண வரவு, வெற்றி, மதிப்புயர்தல் ஆனால் மாத இறுதியில் உடல் நலம் கெடல், சுக்ரனால் புதிய உறவுகள் ஏற்படல் அல்லது மக்கட்பேறு அல்லது புதிய நண்பர்கள் அல்லது மதிப்புயர்தல். புதனால் மாதத்தின் முதல் 20 நாட்களின்போது புதிய நண்பர்கள் ஆனால் தன்னுடைய செயல்களின் விளைவால் எதிரிகளை அல்லது பெரியோர்களைக் கண்டு அஞ்சுதல், எனினும் இறுதி 10 நாட்களின்போது குடும்பத்தில் நன்மைகள் ஏற்படல்.

கடகம்: [புனர்பூசம் 4-ம் பாதம் முதல் ஆயில்யம் முடிய] ராகுவினால் பண வரவு, ஆனால் சனியினால் அதிக பொருள் நஷ்டம், மனயமைதி இழத்தல், குருவினாலும் பண நஷ்டம், அலுவலகக் கவலை, கருத்து வேறுபாடுகள், செவ்வாயினால் மாதத்தின் முதல் 10 நாட்களின்போது தன் பிள்ளைகளால் பண வரவு, அல்லது தவறான வழியில் பொருள் வரவு ஆனால் இறுதி 20 நாட்களின்போது எதிரிகளால் துன்பங்களுக்குள்ளாதல், சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது பண நஷ்டம், ஏமாற்றப்படல், ஆனால் இறுதி 15 நாட்களின்போது மதிப்புயர்தல், பண வரவு, சுக்ரனால் புதிய நல்ல நண்பர்கள், குடும்பத்தில் அதிக மகிழ்ச்சி, புதனால் பண வரவு, நண்பர்கள் ஆனால் மாத இறுதியில் இகழ்ச்சிக்குள்ளாதல்.

சிம்மம்: [மகம், பூரம், உத்திரம், முதல் பாதம் முடிய] ராகுவினால் பயனற்ற அதிக செலவினங்கள், சனி யினால் உடல் நலம் கெடல் அல்லது உற்றார் உறவினர்களுடன் பிரிவு அல்லது தூர பிரயாணம், பண நஷ்டம், குரு வினால் பிரயாணமும் உடல் நலம் கெடலும், செவ்வாயினால் மாதத்தின் முதல் 10 நாட்களின்போது அலுவலகக் கவலைகள் அல்லது எதிரிகளால் துன்பங்களுக்குள்ளாதல் அல்லது வீட்டில் திருடுபோதல் ஆனால் இறுதியில் தன் பிள்ளைகள் மூலம் பொருள் வரவு அல்லது தவறான வழியில் பண வரவு, சூரியனால் பிரயாணம் அல்லது பொருள் நஷ்டம் அல்லது ஏமாற்றப்படல், கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினால் அவதிப்படல், சுக்ரனால் பண வரவு, எதிரிகளை வெற்றி கொளல் அல்லது மதிப்புயர்தல், புதிய ஆடை ஆபரணங்கள் வாங்கப்பெறல், புதனால் மாதத்தின் முதல் 20 நாட்களின்போது கருத்துவேறுபாடுகளினால் பொருள் நஷ்டம், அல்லது தீங்கு செய்யும் மனிதர் களின் அறிவுரைகளைக் கேட்டல், இகழ்ச்சிக்குள்ளாதல், பண வரவு.

கன்னி; [உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய] ராகுவினாலும், சனியினாலும் கெடுதிகள் ஏற்படல், ஆனால் குருவினால் பண வரவு, வீட்டில் நல்ல நிகழ்ச்சிகள் கொண்டாடப்படல், மதிப்புயர்தல், செவ்வாயினால் அலுவலகக் கவலைகள் அல்லது எதிரிகளால் தொல்லைகளுக்குள்ளாதல் அல்லது உடல் நலக்குறைவு அல்லது வீட்டில் திருடு போதல், சூரியனால் பண நஷ்டம், பிரயாணமும் உடல் நலம் கெடலும், சுக்ரனால் பண வரவு, தானிய வகைகள் கிடைக்கப்பெறல், பெரியோர்களால் புகழப்படல், புதனால் இகழ்ச்சிக்குள்ளாதல் அல்லது உடல் நலம் பாதிக்கப்படல், அல்லது எதிரிகள் ஏற்படல், பண நஷ்டம், கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல்.

துலா; [சித்திரை 3-ம் பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய] ராகுவினால் அதிக செலவினங் கள், சனியினால் பண வரவு, குடும்பத்தில் மகிழ்ச்சி, குருவினால் பண நஷ்டம், அலுவலகக் கவலைகள், செவ்வாயினால் மாதத்தின் முதல் 10 நாட்களின்போது பண நஷ்டம், கெடுதிகள் ஏற்படல், சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட் களின்போது சிறிது பொருள் நஷ்டம், சுக்ரனால் நன்மைகள் ஏற்படல், புதனால் மாதத்தின் முதல் 20 நாட்களின் போது பண வரவு, புதிய நண்பர்கள், வாகன வாய்ப்பு, இறுதி 10 நாட்களின்போது உடல் நலம் கெடல், அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல் அல்லது எதிரிகளால் கவலைகள்.

விருச்சிகம்: [விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம் கேட்டை முடிய] ராகுவினால் மகிழ்ச்சி, சனியினால் பண நஷ்டம் அல்லது படிப்புக் கெடல், இகழ்ச்சிக்குள்ளாதல், குருவினால் பண வரவு, வெற்றி, புதிய வீட்டுச் சாமான்கள் வாங்கப்பெறல் அல்லது மக்கட்பேறு, செவ்வாயினால் மாதத்தின் முதல் 10 நாட்களின்போது வெற்றி, மதிப்புயர்தல், ஆனால் இறுதி 20 நாட்களின்போது பண நஷ்டம், மனைவியுடன் கருத்து வேறுபாடு கொள்ளுதல், சூரியனால் முயற்சி கள் வெற்றியடைதல், பண வரவு, மதிப்புயர்தல், உடல் நலம் மேலும் மேன்மையடைதல். சுக்ரனால் எந்தவிதமான

தனுசு: [மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய] ராகுவினால் கருத்து வேறுபாடுகள், சனியினாலும் கருத்து வேறுபாடுகள், உடல் நலம் கெடல், தீய நடவடிக்கைகளுக்குள்ளாதல், குருவினால் உடல் நலம் கெடல், கவலைகள் அல்லது பிரயாணம், செவ்வாயினால் அதிக பண வரவு, வெற்றி, சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது உடல் நலம் கெடல், பொருள் நஷ்டம், ஏமாற்றங்களுக்குள்ளாதல் ஆனால் இறுதி 15 நாட்களின்போது பண வரவு, வெற்றி, சுக்ரனால் புதிய நல்ல நட்புறவுகள், பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள், புதனால் மாதத்தின் முதல் 20 நாட்களின்போது ஏமாற்றங்கள் ஆனால் இறுதியில் பண வரவு, எதிரிகளை வெற்றி கொளல், மகிழ்ச்சி.

மகரம்: [உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய] ராகுவினால் தீய நடவடிக்கைகளுக்குள்ளாதல், சனியினால் உற்றார் உறவினர்களுடன் பிரிவு, குருவினால் மகிழ்ச்சி, பண வரவு, மதிப்புயர்தல், செவ்வாயினால் மாதத்தின் முதல் 10 நாட்களின்போது பண நஷ்டம், இகழ்ச்சிக்குள்ளாதல் ஆனால் இறுதி 20 நாட்களின்போது அதிக அளவு பொருள் வரவு, சூரியனால் உடல் நலம் கெடல், மனைவிக்கு மனயமைதியின்மை, பண நஷ்டம் அல்லது ஏமாற்றங்களுக்குள்ளாதல், சுக்ரனால் கருத்து வேறுபாடுகள், இகழ்ச்சிக்குள்ளாதல், புதனால் மாதத்தின் முதல் 20 நாட்களின்போது பண வரவு, புதியன வாங்குதல், எதிரிகளை வெற்றி கொளல், ஆனால் இறுதி 10 நாட்களின்போது ஏமாற்றங்களுக்குள்ளாதல்.

கும்பம்: [அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி, 3-ம் பாதம் முடிய] ராகுவினாலும், குருவினாலும் மனயமைதி பறிபோதல், சனியினால் பிரயாணம், செவ்வாயினால் மனைவியுடன் கருத்து வேறுபாடுகள் கொளல், அல்லது வயிறு அல்லது கண் சம்பந்தப்பட்ட நோய்களினால் அவதியுறல், அல்லது பண நஷ்டம் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல், சூரியனால் பிரயாணம், மனைவிக்கு மனமகிழ்ச்சியின்மை, உடல் நலம் கெடல், சுக்ரனால் சமய நடவடிக்கைகளுக்குள்ளாதல், பண வரவு அல்லது குடும்பத்தில் மகிழ்ச்சி, புதனால் மாதத்தின் முதல் 20 நாட்களின்போது கருத்து வேறுபாடுகள், ஆனால் இறுதி 10 நாட்களின்போது பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள் வாங்கப்பெறல், எதிரிகளை வெற்றி கொளல்.

மீனம்: [பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய] ராகுவினால் கருத்து வேறுபாடுகள், சனியினால் உடல் நலமேன்மை, வெற்றி. குருவினால் பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது வாகன வாய்ப்பு அல்லது மக்கட்பேறு, செவ்வாயினால் மனைவியுடன் கருத்து வேறுபாடுகள், கண் சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல், பண நஷ்டம், இகழ்ச்சிக்குள்ளாதல், சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது உடல் நலமேன்மை, எதிரிகளை வெற்றிகொளல், இறுதி 15 நாட்களின்போது பிரயாணம், அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோய்களுக்குள்ளாதல், சுக்ரனால் புதிய வீடு அல்லது ஆடை ஆபரணங்கள் வாங்குதற்குரிய வாய்ப்பு அல்லது பண வரவு, புதனால் மாதத்தின் முதல் 20 நாட்களின்போது வெற்றி, அல்லது பதவி உயர்வு ஆனால் இறுதி 10 நாட்களின்போது பெருத்த கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல்.



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED

## வாரீர்!

“ செல்வமுடையோன் திருவேங்கடமுடையான்
அவனுடைய அருட்செல்வத்தைப் பெறுவோம் ”

கல்யாணம் மற்றும் எல்லா விசேஷங்களுக்கும் சிறந்த

## பட்டுப் புடவைகளை வாங்க . . . .

உ



80 வருட பூர்வீக ஸ்தாபனம்!

கைராசி பட்டு ஜவுளிகளுக்கு...

# M.N. நாகேந்திரம் ஸன்ஸ்

மலைவாசல் உள்மண்டபம்

ஸ்தாபிதம்: 1890

திருச்சி-620002

போன்: 4053

அசல் “தேவேந்திரா” புடவைகள் கிடைக்கும். [6, 9, 10]

---

**WE HAVE NO BRANCH OUT SIDE**

---

Regd. No. H/TRP/12 தனிப்பிரதி காசு 50

திருமலைக்கு . . . . . . வருகை புரியுங்கள்!



(கருடோற்சவம்: 7-10-78)

# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி பிரம்மோற்சவம்

உற்சவ விவரங்கள்

| தேதி | கிழமை | பகல் உற்சவங்கள் | இரவு உற்சவங்கள் |
|---|---|---|---|
| 2—10—78 | திங்கள் | — | சேனாபதி உற்சவம் அங்குரார்ப்பணம் |
| 3—10—78 | செவ்வாய் | வஜ்ரகவசத்துடன் துவஜாரோஹணம் | பெரிய சேஷ வாகனம் |
| 4—10—78 | புதன் | சிறிய சேஷ வாஹனம் | ஹம்ஸ வாஹனம் |
| 5—10—78 | வியாழன் | ஸிம்ஹ வாஹனம் | முத்துப்பந்தல் வாஹனம் |
| 6—10—78 | வெள்ளி | கல்பவிருக்ஷ வாஹனம் | சர்வபூபால வாஹனம் |
| 7—10—78 | சனி | பல்லக்கில் மோகினி அவதாரம் | மகரகண்டிகை லக்ஷ்மி ஹாரம் ஆகிய ஆபரணங்களுடன் கருடோற்சவம் |
| 8—10—78 | ஞாயிறு | ஹனுமந்த வாஹனம் [மாலை-வசந்தோற்சவம்] | கஜ வாஹனம் |
| 9—10—78 | திங்கள் | ஸூர்யப்பிரபை வாஹனம் | சந்திரப் பிரபை வாஹனம் |
| 10—10—78 | செவ்வாய் | ரதோற்சவம் | குதிரை வாஹனம், கல்யாணோற்சவம் |
| 11—10—78 | புதன் | பல்லக்கு உற்சவம், அவப்பிரதோற்சவம் [சக்ரஸ்நானம்] | திருச்சி, துவஜாவரோஹணம் |

இவ்விழா நாட்களின் போது மாலை நேரங்களில் ஊஞ்சல் சேவை நடைபெறும்.